# வல்லிக்கண்ணன் கதைகள்



ஆசிரியர் :

வல்லிக்கண்ணன்




116, இராயப்பேட்டை ஐரோடு,

மைலாப்பூர் : : சென்னை-4.

# பதிப்புரை

—*—

ஆசிரியர் வல்லிக்கண்ணன் அவர்களுடைய **'வல்லிக் கண்ணன் கதைகள்'** என்ற கதைத் தொகுதியை எங்களுடைய முதல் வெளியீடாக தமிழ் மக்கள் முன் சமர்ப்பிப்பதில் நாங்கள் அளவிலா மகிழ்ச்சியடைகிறோம்.

வல்லிக்கண்ணன் கடந்த பதினைந்து ஆண்டுகளாக கதை, கட்டுரைகள் எழுதிவருகிறார். சமுதாயத்தில் காணும் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு கதைகள் புனைவதில் மிகுந்ததிறமை வாய்ந்தவர். தான் கண்ட உண்மையை அஞ்சாமல் வெளியிடும் ஆற்றல் படைத்தவர்.

இத் தொகுதியில் வெளியாகியுள்ள 'நல்ல முத்து' என்ற கதையின் ஆங்கில மொழி பெயர்ப்பு இந்தியாவின் தலைசிறந்த ஆங்கில வார இதழான 'Illustrated Weekly of India' பத்திரிகையில் 'Fine Pearls' என்ற பெயரிலும், 'பெரியவளும் சின்னவளும்' என்ற கதையின் ஆங்கில மொழி பெயர்ப்பு 'Hindusthan Standard' என்ற இதழில் 'Little Sister' என்ற பெயரிலும் வெளியாகியுள்ளன. 'புத்தரின் பேரன்கள்' என்ற கதை செக் மொழி பத்திரிகையான New Orient என்ற செக்கோஸ்லேவேகியா நாட்டு இதழில் வெளியாகியுள்ளது. "திறமையான புலமையெனில் வெளி நாட்டார் வணக்கம் செய்வர்" என்ற வாக்கு வல்லிக்கண்ணன் கதைகளைப் பொருத்தவரை உண்மையாகிவிட்டது.

தமிழ் நாட்டு வாசகர்கள் இக் கதைத் தொகுதியை மிக ஆவலுடன் வரவேற்பார்கள் என எண்ணுகிறோம்.

**கயிலைப் பதிப்பகத்தார்.**

# கதைகளைப் பற்றி

"கண்ணாடியில் நம்முடைய முகத்தைப் பார்த்துக் கொள்ள விரும்புகிறோம். அதைப் போலவே நமது அகத்தையும் பார்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆசை ஒவ்வொருவருக்கும் உண்டாகிறது. அந்த ஆசையைத் தீர்த்து வைப்பது தான் கலை உலகு என்னும் கண்ணாடி.

வல்லிக்கண்ணன் ஒரு கலைஞன்; உள்ளதை உள்ளபடி எடுத்துக் காட்டும் கண்ணாடியைப் போன்ற தன்மையுடைய கலைஞன். அதன் விளைவாகத் தான் அகத்தின் மூலை முடுக்கும், எல்லைப்புறமும், அடிமட்டமும் அவர் கதைகளுக்கு விஷயமாகின்றன. அதன் விளைவாகத் தான் மனத்தின் அழுக்கும், திருட்டுத்தனமும் அவர் கையில் படாதபாடு படுகின்றன.

நம்முடைய உள்ளத்திலும், சமூகத்திலும் மறைந்து திரியும் உணர்ச்சிகளையும் சூழல்களையும் கண்டு, 'பின்னால் நிற்காதே, முன்னே வந்து தொலை' என்று புழுங்கி வெடிக்கும் எண்ண அடிப்படையின் மீது தான் ஏறக்குறைய எல்லாக் கதைகளையும் எழுப்பி இருக்கிறார்... கலைத் திறனுடன் சமூக அமைப்பையும், பொருளாதாரத் துறையையும் சில கதைகளில் சோதித்திருக்கிறார்... கருத் தழகும், உயர் நோக்கும், நடை யழகும் நிறைந்த கதைத் தொகுதிக்கு முகவுரை எதற்காக?"

சில வருஷங்களுக்கு முன்பு வெளிவந்த எனது 'நாட்டியக்காரி' முதலிய கதைகளின் தொகுதிக்கு இப்படி முகவுரை எழுதியிருக்கிறார் எனது அன்புக்கும் மதிப்புக்குமுரிய எழுத்தாளர் திரு. ந. பிச்சமூர்த்தி அவர்கள். அவரது வார்த்தைகள், இந்தக் கதைத் தொகுதிக்கும் பொருந்தும் என்பதனாலேயே அவற்றை இங்கு எடுத்து எழுதி யிருக்கிறேன்.

'வஞ்சம்' முதலிய பதினோரு கதைகளைக் கொண்ட இந்தப் புத்தகம் எனது கதைகளின் மூன்றாவது தொகுப்பாகும்.

1940 முதல் நான் எழுதி வருகிறேன். பல நூறு கதைகள் எழுதி யிருக்கிறேன். இன்னும் எழுதிக் கொண்டு தான் இருக்கிறேன். தமிழ் நாட்டின் பல பத்திரிகைகளிலும் எனது கதைகள் வெளிவந்தது உண்டு. எனது கதைகள் சிலவற்றை தமிழ் நாட்டின் எந்தப் பத்திரிகையும் வெளியிடத் துணியாததும் உண்டு. எண்ணங்களையும் சொற்களையும் கொண்டு வித வித எழுத்து முயற்சிகளைச் செய்து மகிழ்வதே எனது தொழில், பொழுதுபோக்கு, விளையாட்டு எல்லாம். 'எழுத்து' என் பிழைப்பு அல்ல. அதுவே என் வாழ்வு.

ஆகவே, எதிர்ப்படும் வெற்றி தோல்விகளைப் பற்றிக் கவலையுறாமல் நான் எழுதினேன்...எழுதுகிறேன்...எழுதிக் கொண்டே இருப்பேன். பாராட்டுகளும், குறை கூறல்களும், போதிய கவனிப்பைப் பெறுவதும், கவனிக்கப்படாமலே போவதும் சகஜமான விஷயங்கள் தானே!

இத் தொகுதியில் உள்ள கதைகள் 1950-லிருந்து 1953-க்கு இடைப்பட்ட பல்வேறு சமயங்களில் வெவ்வேறு பத்திரிகைகளில் இடம் பெற்றவை. 'வஞ்சம்' என்கிற நெடுங்கதை 'அமுதசுரபி'யில் வந்தது. எவ்வளவோ பேர் கவனத்தைக் கவர்ந்தது. கதையைப் பாராட்டியவர்களில் அநேகர் 'இப்படி நடக்க முடியுமா? இதில் எல்லாம் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?' என்று என்னிடம் கேட்டார்கள்.

கதை எழுதுகிறவன் எதையும் எப்படியும் எழுதலாம்; ஆனால், சொல்கிற விஷயத்தைச் சுவையாகச் சொல்லக் கற்றிருக்க வேண்டும்; அது தான் முக்கியம்—இதுவே என் நோக்கம். எனக்கு நம்பிக்கை உள்ள விஷயங்களைப் பற்றி மட்டும் தான் நான் எழுதவேண்டும் என்கிற விதி எதுவும் இல்லையே! வாழ்க்கையில் நான் ஒரு மாணவன். அனுபவம் கற்றுத் தருகிற விஷயங்களை அழகாகச் சொல்லிலே தீட்டி வைக்கும் ஆசை எனக்கு உண்டு. அதன் விளைவுகளே என்னுடைய எழுத்துக்கள். நான் கண்டவை, கேட்டவை, எனது நண்பர்கள் சொன்ன சிறு கருத்துக்கள், நான் படித்த விஷயங்கள், தூண்டிய எண்ணங்கள், வாழ்வில் நடப்பவை, நடக்காதவை எல்லாம் தான் என் கதைகளுக்குக் கரு அமைத்துக் கொடுக்கின்றன.

'வஞ்சம்' கதை விஷயமும் அப்படித் தான். அறிவும் ஆராய்ச்சியும் மிக வேகமாக வளர்ந்துவிட்ட இக்காலத்திலும் அக் கதையில் வருவது போன்ற செயல்களை நம்புகிறவர்கள்—இந்த நாட்டில் மட்டுமல்ல; உலகின் பல பகுதிகளிலும்—அதிகமாகத் தான் இருக்கிறார்கள். மக்களிடையே உயிரோடிருக்கும் எண்ணங்களை எழுத்திலே பிடித்து வைப்பதில் என்ன தவறு இருக்க முடியும்?

'வஞ்சம்', 'நம்பிக்கை' ஆகியவை 'அமுதசுரபி'யிலும், 'தெளிவு', 'சக்தியுள்ள தெய்வம்', 'நல்ல முத்து', 'விண்ணும் மண்ணும்' ஆகியவை 'ஹனுமான்' இதழ்களிலும், 'ஞானோதயம்' 'கலைக்கதிர்' பத்திரிகையிலும், 'இன்பம்' 'சிவாஜி'யிலும் பிரசுரமாயின. என் கதைகளைப் பிரசுரித்து எனக்கு ஊக்கமளித்த பத்திரிகை ஆசிரியர்களுக்கு எனது நன்றி.

'வல்லிக்கண்ணன் கதைகள்' எனும் இத்தொகுப்பை சிறப்பாக வெளியிட முன்வந்த பதிப்பகத்தாருக்கு எனது இதய பூர்வமான நன்றி. இதை உருவாக்குவதில் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் காட்டிய எனது அருமை நண்பர் திரு. எம். கே. சென்னியப்பன் அவர்களுக்கு என் நன்றி என்றும் உண்டு. இத் தொகுதி அழகாக வெளிவருவதற்காகத் தீவிரமாய் ஒத்துழைத்த 'லாயல் பிரஸ்' அதிபர் திரு. கே. நடேச முதலியார் அவர்களுக்கும் என் அன்பும் நன்றியும் உரியன.

ரசிக அன்பர்களுக்கு 'ஒரு வார்த்தை'. எனது கதைக் கலையின் பூரணப் பண்புகளும் இந்த ஒரு சிறு தொகுதியில் அடங்கி விடவில்லை. இதைப் போல் இன்னும் பல தொகுதிகள் வெளிவந்தால் தான் எனது கதைகளின் முழுத்தன்மையும் புலனாகும். இப்போதைக்கு இது ஒரு 'அறிமுகம்'; எனது கதைப் பூங்காவுக்கு ஒரு சிறு வாசல். என்றாலும், இத்தொகுதி உங்களுக்கு ஏமாற்றம் அளிக்காது என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

திருவல்லிக்கேணி,
14 மே 1954.

**வல்லிக்கண்ணன்**

# உள்ளுறை






**ஆரம்பம் :**

விஷயத்தைக் கேள்வியுற்ற ஒண்டிப்புலியா பிள்ளை, கறுக்கரிவாள் நுனி போல் கூர்த்து நின்ற மீசையிலே கைபோட்டு முறுக்கியபடி கனைப்புச் சிரிப்பு உதிர்த்தார்.

"இன்ஸ்பெக்டர் எல்லைக்குநாத பிள்ளைவாள் நல்ல துக்காக இந்த ஊருக்கு வரவில்லை என்று நான் அப்பவே நெனெச்சேன். அவனுடைய நல்ல காலம் இந்த ஊரு எல்லையை மிதிச்ச உடனேயே அவனை விட்டுப் போயிட்டுது. ஐயாவாள் கிட்டே எவன் வாலாட்டினாலும் சரி, அவன் தொலைஞ்சான்னு தான் அர்த்தம். ஆகவே எல்லைக்கு நாதன் ஒழிஞ்சான்; அவன் பெண்டாட்டி இப்பவே தாலியறுத்த மாதிரிதான். இதை நீரு நிச்சயமாக நம்பலாம் வேய்!"

இப்படி அவர் தனது அந்தரங்க நண்பர் ஒருவரிடம் சொன்னார்.

* * * *

"அஹஹ, ஒண்டிப் புலியாமா அவம் பேரு? ஏன், ஒன்றரை டசன் புளியின்னு பேரு வச்சுக் கிடறது தானே! அந்தப் பாச்சா எல்லாம் இன்ஸ்பெக்டர் எல்லைக்கியா பிள்ளையிடம் பலிக்காதய்யா. நான் இந்த எல்லையிலே அடி எடுத்து வைத்ததுமே பய செத்தமாதிரித் தான், ஒண்டிப்புலி நொண்டிப்புலி ஆகிவிட்டதுன்னு தான் அர்த்தம். இத்தனை நாள் வரை டிபார்ட்மெண்ட்டுக்குக் கடுக்கா கொடுத்த மாதிரியிலே, இன்னமும் புலியா புள்ளே வாலாட்ட முடியாது. ஈயை நசுக்கிற மாதிரியிலே நசுக்கிப் போடுவேன். ஆமா!" என்று அட்டகாசப் பேச்சு உதிர்த்திருந்தார் இன்ஸ்பெக்டர் எல்லைக்குநாத பிள்ளை.

இடி இடியேறுவோடு மோதுகிறது. வைரம் வைரத்தோடு உராய்கிறது. ஒண்டிப்புலி தனக்குச் சரியான ஜதையோடு மோதவேண்டிய காலம் வந்துவிட்டது.

இவ்விதம் எண்ணினார்கள் அந்த வட்டாரத்தில் வசித்தவர்கள். கட்சி பிரிந்து வாதித்து மகிழ்ந்தார்கள். "என் சேவல் பெரிது....உன் சேவல் வலியது" என்ற தோரணையிலே.

ஒண்டிப்புலிக்கு எத்தனை பக்தர்கள் இருந்தார்களோ அத்தனை பக்தர்கள் 'எல்லைக்கியா பிள்ளை'க்கும் இருந்தார்கள். ஆகவே அந்தப் பிராந்தியத்திலே உற்சாக ஜுரம் விஷ வேகத்திலே பரவியிருந்தது.

* * * *

இன்ஸ்பெக்டர் எல்லைக்குநாத பிள்ளை நீதியும், நேர்மையும் ஒரு சிறிதும் வழுவாத குணக்குன்று. 'நம்பினபேருக்கு நடராசா; நம்பாத பேருக்கு எமராசா!' என்று அவர் புகழ் நெடுகப் பரவியிருந்தது. அவரை நம்பிக் கும்பிட்டுக் குழையடிப்பதிலே அவரை 'நட

ராசா'வாகக் கொண்டுவிட முடியாது என்பது எல்லோருக்கும் தெரியும். நீதியை, நேர்மையை, உண்மையை, சட்டத்தை, தான் அங்கம் வகித்து வளர்க்கிற இலாக்காவை நம்பி ஒழுங்காகச் செயல் புரியவேண்டும் என்பதே அவர் பிறரிடம் எதிர்பார்க்கும் விஷயம்.

சட்டத்திற்கு அஞ்சாதவர்களைக்கூட தனது கைச் சவுக்குக்கு அஞ்சி நடுங்கும்படி செய்யும் உறுதி பெற்றவர் அவர். 'இன்ஸ்பெக்டர் எல்லைக்கியா பிள்ளை' வருகிறார் என்பதை அறிவிக்கும் மோட்டார் சைக்கிளின் 'டபடப' சப்தம்; அதைத் தொடர்ந்து அறிவிக்கும் வீணர்களின் ஓடுதல்களும் ஒழிதல்களும். 'மன்னன் வரும்போதே சவுக்கை இடதுசாரி வலதுசாரி என்று வீசி விளாசிக்கொண்டுதான் வருவான்!' என வியப்பர் பலர்.

வருடக் கணக்கிலே பிடிபடாமல் 'டிமிக்கி' கொடுத்துக்கொண்டிருக்கும் 'கேஸ்களை' பைசல் பண்ணுவதற்கு எல்லைக்கியா பிள்ளைதான் வந்து சேருவார். எப்பாடுபட்டாவது ஒழித்துக் கட்டிவிடுவார். அதனால்தான் அவரை 'எமன்' என்று பலர் கருதியதில் தவறு ஒன்றும் இல்லை.

* * * *

'ஒண்டிப்புலியா பிள்ளையைப் பெற்றெடுத்தவர்கள் அவருக்குச் சரியான பெயரையும் சூட்டினார்கள் என்று வியக்காமல் இருக்கமுடியாது.

எதிலுமே பெரிய புலிதான் அவர். 'எமப்பனுவன்' 'மலைக் கோப்பன்' 'வில்லாதி வில்லன்' 'விளைஞ்ச கொம்பன்' 'சூரப்புலி' என்றெல்லாம் அவரை அர்ச்சித்து வந்தார்கள் பலரும்.

'அவனாலே ஆகாத காரியம் எதுவுமே இருக்க முடியாது. நினைச்சால், புலிப்பாலைக்கூடக் கறந்துகொண்டு வந்துவிடுவான்' என்று மகிழ்ந்து பேசும் பெரியவர்கள் உண்மையைத்தான் சொன்னார்கள்.

பண்ணைக்காடு வட்டாரத்தின் சர்வ சக்தி பெற்ற ராஜா ஒண்டிப்புலிதான். எவன் தலையையாவது கொண்டு போகவேண்டுமா? பாளை சீவுகிற மாதிரிச் சீவப்பட்டு விடும் அந்த நபரின் தலை. அழகிய பெண் எவளாவது புலியா பிள்ளையின் கண்ணிலே தென்பட்டால் அவளுக்கு ஆபத்துத்தான். அப்புறம் அந்த எல்லையில் அவள் தட்டுப்படமாட்டாள். பண்ணையார் ஒண்டிப்புலியின் ஆசைக்கு அவள் இணங்கியிருந்தால் அவளுக்கு நல்லது கிட்டியிருக்கும். அவள் சண்டித்தனம் பண்ணியிருந் தாலோ அவளது பிரேதம் ஏதோ கள்ளிப்புதரிலோ-தாழம் புற்றிலோ—தண்ணீர் கசத்திலோ சரண் புகுந்துவிடும்.

பண்ணைக்காட்டுப் பண்ணையார் ஒண்டிப்புலியா பிள்ளை பெரிய சர்வாதிகாரி மாதிரித்தான். அவரது வட்டாரத்திலே அவர் இட்டதுதான் சட்டம். அதனால் அவரை எண்ணி நடுங்கியவர்களுக்குக் குறைவில்லை. அவரைப் பாராட்டியவர்களின் தொகையும் அதிகம் உண்டு. காரணம் அவர் வீட்டுக் காவல் நாய்கள் மாதிரி வளைய வருகிறவர்களுக்கு, அவர் நிறையத் 'தீனி போடு வது' வழக்கம்.

தனக்கென ஒரு சட்டமும் வாழ்க்கைத் திட்டமும் வகுத்துக்கொண்டதால், தன்னை அடக்கி ஒடுக்கச் சட் டங்களிடும் ஆட்சி இலாகாவினரை அவர் தனது பரம விரோதியாகக் கொண்டிருந்தார்.

ஒண்டிப்புலியா பிள்ளை அபாயகரமான ஆசாமி என்று எடை போட்டு வைத்திருந்த ஆட்சி இலாகாவின ருக்கு, 'அவர் அடக்கப்படவேண்டிய புள்ளி' என்று

தோன்றிற்று. ஆனால் ஒடுக்க முடியாத எதிரியாகத் திகழ்ந்தார், பண்ணையார்.

* * *

**பண்ணைக்காடு—**

விசேஷமான வட்டாரம் அது. வளமான பிராந்தியம். ஓங்கி வளர்ந்த மலை ஒருபுறம். அங்கு சந்தன மரங்களும், தேக்கும், மூங்கிலும் காடுகாடாக வளர்ந்து நின்றன. ஆள்வோர்.... அதையெல்லாம் தமது உடைமையாக மதித்திருந்தனர். ஆனாலோ ஒண்டிப்புலி தாராளச் சொந்தம் பாராட்டி, இஷ்டம்போல் மரங்களை வெட்டி விற்கத் தயங்கியதில்லை. எச்சரிக்கைகளும், பயமுறுத்தல்களும் பலனளிக்கவில்லை. மேலும் அவர் நேரடியாக ஈடுபடுவதில்லை. கள்ளத்தனமாக இவ்வேலை செய்பவர்களுக்கு ஆதரவளித்து நிறையப் பங்கு பெற்றுவந்தார்.

ஆப்காரி இலாகாவுடனும் போட்டியிட்டார் அவர். கள்ளச் சாராயம் காய்ச்சுகிற தொழில் அவர் எல்லைக்குள் பெரிய அளவில் வளர்ந்தது என்று கணக்கிட்டிருந்தார்கள். ஆயினும் அவரை வசமாக 'மாட்டி வைக்க' இயலவில்லை சம்பந்தப்பட்டவர்களினாலே.

ஜெயிலிலிருந்து தப்பி ஓடிவந்துவிட்ட பயங்கரக் கைதி மூக்கத்தேவனை பண்ணையார் மறைத்து வைத்துக் கொண்டு, தான் எண்ணியதைச் செய்து முடிக்கக்கூடிய 'ஏவல் பூதம்' ஆக உபயோகிக்கிறார் என்றும் சொல்லப்பட்டது.

அவரை அடக்கவந்த அதிகாரிகள் அவரது நண்பர்களாக மாறி வாழ்ந்தார்கள். அவர்மீது சந்தேகம் கொள்ள ஏதுவில்லை என்று ஓங்கி அடித்தார்கள்.

எல்லாவற்றையும் ஆராய்ந்து தீர்த்துக் கட்டுவதற்காகத்தான் இன்ஸ்பெக்டர் எல்லேக்குநாத பிள்ளை அந்த வட்டாரத்திற்கு அனுப்பப்பட்டிருந்தார்.

"ஒண்டிப்புலி என்ன பெரிய மம்மாவோ!" என்று கெக்கலித்தார் இன்ஸ்பெக்டர் பிள்ளை.

"பூடம் தெரியாமல் சாமி ஆடவந்த பூசாரி அவன். சரியான பாடம் படிக்கப் போகிறுன்!" என்று ஆரவாரித்தார் ஒண்டிப்புலி.

இரண்டு பேரிடமும் பழகிப் பேசித் தூண்டிவிட்டு 'வத்தி வச்சு வாழும்' அன்பர்கள் அந்த வட்டாரத்திலும் இருந்தனர்.

* * * *

இன்ஸ்பெக்டர் எல்லேக்குநாத பிள்ளை செயல் திட்டங்களிடும் முன்பு, சுற்றுப்புறங்கள்—எதிராளியின் வலு—வட்டாரத்து நிலைமை முதலிய சகல விஷயங்களையும் ஆராய்ந்தார்.

ஒண்டிப்புலியா பிள்ளையைப் பற்றிய பழைய ரிக்கார்டுகளைப் படித்துப் பார்த்து, அவை கவைக்கு உதவாதவை என்று ஒதுக்கி விட்டார். ஊரில் உள்ள பிரமுகர்கள், சாதாரண ஆசாமிகள் பலரிடம் விசாரித்துப் பார்த்தார்.

இவ்வித விசாரணைகளினுல் எல்லாம் அவர் முக்கியமாகப் புரிந்துகொள்ள முடிந்த ஒரு பெரிய உண்மை, 'ஒண்டிப் புலியா பிள்ளை ஒரு மர்ம மனிதன். அவரைப் பற்றிய விவரங்களைத் தெளிவாக அறிந்துகொள்ளவே முடியாது' என்பதுதான்.

ஒவ்வொருவர் ஒவ்வொன்றைச் சொன்னுர்கள். பலர் அளவுக்கு அதிகமாகப் புளுகியிருக்கலாம். பலர் மழுப்

பியும் திரித்தும் குறைத்தும் கூறியிருக்கலாம். ஆனால், எல்லாரும் சொல்லத் தவறாத விஷயம் ஒன்று இருந்தது.

'ஒண்டிப்புலியா பிள்ளைக்கு விஷ ஜந்துக்களிடம் பயமே கிடையாது: அவரிடம் ஏதோ ஒரு சக்தி இருக்கிறது. எவ்வளவு பெரிய மலைப்பாம்பாக இருந்தாலும் சரி; எலும்பை நொறுக்கி ஆளை அப்படியே விழுங்கி விடும் பெரிய பெரிய பாம்புகளாக இருந்தாலும் சரிதான்—அவர் கூப்பிட்டால் வந்துவிடும். நாய்க் குட்டி போல் வாலை அசைத்துக்கொண்டு அவர் காலடியிலே கிடக்கும். அவர் மிகவும் செல்வமாகப் போற்றுகிற ஒரு பெரிய மலைப்பாம்பு இருக்கிறது; அவர் ஏவுகிறபடி எல்லாம் ஆடும்.'

இந்த விஷயம் இன்ஸ்பெக்டரின் மனத்தில் உறுத்தியது. 'ஒண்டிப்புலி மாந்தரீகம் கற்றவரோ?' என்று கேட்டார் சிலரிடம்.

"கற்றிருக்கலாம். அவருடைய தாத்தா பெரிய மந்திரவாதி. இந்த ஜில்லாவிலேயே அவரைத் தோற்கடிக்கக் கூடிய மந்திரவாதி எவனும் இருந்ததில்லை. கீர்த்திபெற்ற மலையாளத்து மந்திரவாதியெல்லாம் அவர் முன் தோற்றுத் தலைகுனிந்து ஓடிப்போனார்கள். அவர் பிழைப்புக்காக அதைக் கற்கவில்லை. சும்மா கலையாகக் கற்று வைக்கலாமே என்று படித்துத் தேர்ச்சி அடைந்திருந்தார். அவர் விட்டுப்போன சுவடிகள் புத்தகங்கள் மூலம் இவரும் ஏதாவது கற்றிருப்பது சாத்தியம்தான். இவரைத் தேடி மலையாளத்து மந்திரவாதி ஒருவன் அடிக்கடி வந்து போவது உண்டு" என்று தெரியவந்தது.

'ஒண்டிப்புலியா பிள்ளை கடின சித்தம் உள்ளவர். ஆளைப் பார்த்தால் அவரது குணம் தெரியவே தெரியாது. சில சமயங்களில் அவர் நடந்துகொள்கிற விதத்தைக் கவனித்தால், இந்த மனுஷனை இவ்வளவு ஈவு இரக்கம்

இல்லாமல் நடந்துகொள்கிறார் என்ற ஆச்சர்யம் உண்டாகும் என்று சொன்னார் ஒருவர்.

'என்ன விஷயம்? ஏன் அப்படிச்சொல்கிறீர்கள்?' என்று விசாரித்தார் இன்ஸ்பெக்டர்.

'யாராவது ஆபத்தில் சிக்கிக்கொள்கிறார்கள் என்று வையுங்கள். ஒண்டிப்புலி அருகில் இருந்தால் கூட, காப்பாற்றி உதவக் கூடிய வசதி இருந்தால் கூட, ஒரு விரலையும் அசைக்கமாட்டார். முகத்திலே சிரிப்பு தவழ, அமைதியாக வேடிக்கை பார்த்து நிற்பார். ஒரு சமயம் குழந்தையை மாடு முட்டித் தரையோடு தரையாகத் தேய்க்கும் போதும் அவர் வேடிக்கை பார்த்து நின்றார். அவர் கையில் துப்பாக்கி இருந்தது. ஒரு பெண்ணை எருமை மாடு துரத்திக் கொம்புகளினால் தூக்கி எறிந்த போதும் சிரித்துக்கொண்டு தான் நின்றார். இரண்டு பேர் சண்டையிட்டு ஒருவனை ஒருவன் கத்தியால் குத்தி நின்றனர். கொலை விழக்கூடிய அச்சூழ்நிலையில்கூட அவர் கையைக் கட்டிக்கொண்டு, வேடிக்கை பார்த்து நின்றாரே தவிர அவர்களை விலக்கிவிட எவ்வகை முயற்சியும் செய்யவில்லை' என்றனர் விவரமறிந்தவர்.

'உம்' என்று தலையாட்டினார் எல்லைக்குநாதர். வேறொன்றும் சொல்லவில்லை, வெளிப்படையாக.

* * * *

இவ்வளவு புகழ் பெற்ற ஒண்டிப்புலியா பிள்ளையை நேரடியாக சந்திக்க வேண்டியதுதான் என்று தீர்மானித்தார் இன்ஸ்பெக்டர். உத்தியோகத் தோரணையில் எதிரியாக அல்ல. அந்த வட்டாரத்துக்குப் புதிதாக வந்திருப்பதால், செல்வாக்குள்ள பண்ணையாரோடு அறிமுகம் செய்துகொள்ளும் எண்ணத்தினால்தான். இப்படித் தான் சொல்லிக்கொண்டார் அவர்.

ஒண்டிப்புலியைத் தன் வீடு தேடி வரவைக்கும் ஆற்றல் அவருக்கு இருந்தாலும், இன்ஸ்பெக்டர் அதை விரும்பவில்லை. வரச்சொல்லி ஆள் அனுப்பினால், அதைத் தவறாக எண்ணிக்கொண்டு பண்ணையார் வராமலிருந்து விட்டால், அது தன்னை அவமதித்த செயலாகிவிடும் என்று நினைத்தார் எல்லைக்குநாதர். 'நாமாக அவனைத் தேடிப் போனால் அவன் உச்சந்தலையிலே வாரியலாலே அடிச்ச மாதிரி, குளிர்ந்து போகும். அவனைப் பற்றிய விஷயங்களை அதிகப்படியாக அறிந்து கொள்ளவும் முடியும்' என்ற நினைப்பு மிகுந்தது அவர் உள்ளத்தில்.

அவர் நினைத்தது சரியாகத்தான் இருந்தது. எதிர் பாராதபடி இன்ஸ்பெக்டர் தனது வீடு தேடி விஜயம் செய்து தன்னை மிகுதியும் கௌரவித்துவிட்டதாகவே நம்பினார் பண்ணையார். உபசாரங்கள் செய்து தடபுடல் படுத்தினார்.

இரண்டு பேரும் தங்கள் மன ஆழத்தின் குமுறல் களை மேலெழவிடாது அமுக்கிவிட்டுச் சுமுகமாகவே பேசி மகிழ்ந்தார்கள். மலை, காடு, வேட்டை முதலிய பல விஷயங்களையும் தொட்டு வளர்ந்தது பேச்சு. தமது அனுபவங்களைப் பற்றிச் சுவையாக அளந்து தள்ளிக் கொண்டிருந்தார் ஒண்டிப்புலி. தமது பேச்சுக்கு ஆதார மாகப் பெரிய பெரிய மான் கொம்புகள். மான் தோல்கள், மலை அணில் தோல், காட்டு எருமைக் கொம்புகள் முதலியவற்றை எல்லாம் காட்டினார்.

அவை ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்த அறையில் ஒரு மூலையில், கண்ணாடிப் பெட்டியினுள் மிகவும் பெரிய பாம்பு ஒன்று சுற்றி வளைத்துச் சுருட்டிக் கொண்டு கிடந்தது. அதைப்பார்த்த இன்ஸ்பெக்டர் 'யேப்பா! எவ்வளவு பெரிய பாம்பு!' என்று மலைத்தார்.

"அது உயிருள்ள பாம்பு அல்ல. செத்த பிறகு பதப் படுத்தி, உயிருள்ளது போல் பாவனைக்கு வைத்திருக்

கிறது. அவ்வளவு தான்'' என்று சொல்லிச் சிரித்தார் ஒண்டிப்புலி.

“நிஜமாவா? பார்வையிலே அப்படித் தோணலியே. உயிருள்ளது போலவே இருக்குதே!'' என்று முனங்கினார் எல்லைக்குநாதர்.

“என் பேச்சிலே உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? அது செத்த பாம்புதான். வேணும்னு தொட்டுத் தூக்கிப் பார்க்கிறேளா?'' என்று கனைத்தார் மற்றவர்.

இன்ஸ்பெக்டர் “வேண்டாம் வேண்டாம்'' என்று மறுத்துவிட்டார்.

அதிலிருந்து பேச்சு பாம்புகளைப் பற்றித்தான் அடிபட்டது. ஒண்டிப்புலியா பிள்ளை பேசப் பேச பாம்புகளைப் பற்றிய விஷயத்தில் அவர் ஒரு 'அத்தாரிட்டி' என்று தான் பட்டது எல்லைக்கு நாதருக்கு. பாம்புகளைப் பற்றிய பல புத்தகங்கள் வைத்திருந்தார். பண்ணையார். போட்டோக்கள், சித்திரங்கள் எல்லாம் சேகரித்து வைத்திருந்தார். எல்லாவற்றையும் பெருமையோடு, இன்ஸ்பெக்டருக்குக் காட்டி மகிழ்ந்தார்.

பண்ணையாரின் ஞானத்தை உணர்ந்த இன்ஸ்பெக்டர் பிரமித்து விட்டார் என்றே சொல்ல வேண்டும். விடை பெற்றுப் பிரியும் போது அவருக்குக் கடமை உணர்வு தலைதூக்கியது. பேச்சோடு பேச்சாகச் சொல்லி வைத்தார்.

“என்ன பண்ணையார்வாள், ரிப்போர்ட்டுகள் வரும்படி நீங்க என் வழி வச்சுக்கிடணும்? உங்க எல்லையிலே குற்றம் ஜாஸ்தி இருக்கிறப்லே தெரியுதே. நீங்களே கவனிச்சு ஒடுக்கி விடப்படாது?''

பண்ணையார் அவரை ஒரு தினுசாகப் பார்த்தார். தனிரகச் சிரிப்பு ஒன்று உதித்தார். அந்தப் பார்வைக்கும் சிரிப்புக்கும் என்ன பொருள் உண்டு என்பது எல்லேக்குநாதருக்குப் புரியவில்லை. ஆனால், அவர் உள்ளத்திலே ஒரு பதைப்பு பிறந்தது. அர்த்தமற்ற, தெளிவற்ற, காரணமற்ற, ஒரு அரிப்பு—வேதனையில்லா ஒரு வகைக் குழப்பம்—அவர் உள்ளத்தில் சுழன்றது.

மோட்டார் சைக்கிளை வேகமாக உதைத்து முடுக்கி விட்டு ஏறினார் எல்லேயா பிள்ளை.

"உங்க நன்மைக்குத்தான் சொன்னேன்... ஒரு நாள் நம்ம வீட்டுக்கு வாங்க, பண்ணையார்வாள்!" என்று கத்தியபடியே, வாகனத்துக்கு இயக்கம் கொடுத்தார் அவர். ஓடிய 'மோட்டார் பைக்கின்' ஒலிக்கு இயைந்தாற்போன்ற கனைப்புச் சிரிப்பு சிந்தினார் ஒண்டிப் புலி.

"என் நன்மைக்காகச் சொல்கிறானாம்—மடையன்!" என்று உறுமியது அவர் உள்ளம்.

* * * *

எல்லேக்குநாத பிள்ளை பண்ணையாரைச் சந்தித்து விட்டு வந்ததற்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு,இன்ஸ்பெக்டர் வீட்டுக்கு ஒரு வண்டி நிறைய விறகு வந்தது. 'பண்ணையார் அனுப்பி வைத்தார்' என்றான் வண்டிக்காரன்.

"வீடு தெரியாமல் வந்துவிட்டே போலிருக்கே! பண்ணையார் வீட்டிலே கொண்டு போய் இறக்கு" என்று கண்டிப்பாகச் சொல்லி, விறகு வண்டியைத் திருப்பி அனுப்பி விட்டார் இன்ஸ்பெக்டர்.

மறு நாளே வந்து சேர்ந்தார் ஒண்டிப்புலி.

"என்ன நீங்க! விறகைத் திருப்பி விட்டீங்களே?" என்று விசாரித்தார் அவர்.

"பண்ணையார்வாள்! கோபிக்கக்கூடாது. லஞ்சம் வாங்கும் வழக்கம் எல்லையா பிள்ளையிடம் கிடையாது" என்று ஓங்கி அடித்தார் இன்ஸ்பெக்டர்.

பண்ணையாரின் முகம் கறுத்தது. "இது லஞ்சம் என்ற எண்ணத்தோடு கொடுக்கலியே. நண்பர் என்ற நினைப்பிலே அன்போடு அனுப்பி வைத்தேன். அது தவறா?" என்றார்.

"இனிமேல் அதுமாதிரி எதையுமே அனுப்பாதீங்க. இவ்வளவு நாள் ஸெர்விஸிலேயே இல்லாத புதிய பாடத்தை எல்லைக்குநாதன் உங்க நட்புக்காகக் கற்றுக் கொள்ளணுமா என்ன? ஹெஹ்ஹ..!"

இன்ஸ்பெக்டரின் அழுத்தமான பேச்சு பண்ணையாரின் இதயத்தில் கல் போல் விழுந்தது. "நீங்கள் தவறான மனோபாவம் கொண்டிருக்கிறீர்கள்...." என்று தொடங்கினார் அவர்.

எல்லைக்குநாதர் மிடுக்காகச் சிரித்தார். சொன்னார்: "உங்கள் அகராதிதான் புதிதாகப் பதிப்பிக்கப்பட வேண்டும். நான் இருக்கிற இடத்திலே தவறுக்கு இடமில்லை! தவறு தலை காட்டவே கூடாது.

ஒண்டிப்புலி ஒரு தினுசாகப் பார்த்தார். முதல் சந்திப்பின் போது அவர் எறிந்த பார்வையின் ஞாபகம் தான் வந்தது இன்ஸ்பெக்டருக்கு.

தனி ரகமாகச் சிரிப்பொலி பரப்பினார் பண்ணையார். முன்பொரு தடவை அவர் சிரித்தது எதிரொலித்தது எல்லைக்குநாதரின் நினைவு வெளியிலே.

எனினும், அந்தப் பார்வையின் அர்த்தம்—சிரிப்பின் பொருள்—விளங்கவே இல்லை!

“இன்னைக்குக் கொஞ்சம் சந்தனக் கட்டைகள் கொண்டு வந்தேன். ஸ்பெஷலாக எடுக்கப்பட்டவை. இந்தப் பக்கத்துச் சந்தன மரங்களில் தனி வாசனை உண்டு. ஏழெட்டுக் கட்டைகளை வண்டியிலே, எடுத்துப் போடச் சொன்னேன். உள்ளே கொண்டு வந்து வைக்கும்படி.........”

இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டார்: “பண்ணையார்வாள்! எல்லைக்குநா தனிடம் ஒரே பேச்சுதான். அப்ப ஒரு பேச்சு; அஞ்சு நிமிஷம் கழிச்சு ஒரு பேச்சு என்கிற விவகாரமே கிடையாது. ரொக்கமாகவோ, வேறு ரகங்களிலோ லஞ்சம் வாங்கும் வழக்கம் நம்மிடம் கிடையாது.”

ஒண்டிப்புலியா பிள்ளை எழுந்தார். ‘உம்’ என்று சொன்னார். சிறு சிரிப்பு உதிர்ந்தது அதன் பின்னால். “உங்க இஷ்டம்!.... நான் வாறேன்” என நகர்ந்தார்.

வாசல் வரை தொடர்ந்த இன்ஸ்பெக்டர் ஞாபக மூட்டுவது போல் எச்சரித்தார். “பண்ணையார்வாள், ஒரு விஷயமில்லா. சந்தனக் காடு, மூங்கில் காடுகளில் நம்பர் போட்ட மரங்கள் கூடக் காணமப் போயிருக்குது என்று ரிப்போர்ட் வந்திருக்குது. உங்க ‘ஏரியா’விலே திருட்டுப்பயலுக நொம்ப சுதந்திரமாக உலவுவானுங்க போல் தெரியுது. நீங்க நடவடிக்கை எடுத்தா நல்லது....”

“அப்படியா!” என்று சொல்லிவிட்டுத், தமக்கே உரிய தனிரகச் சிரிப்பைச் சிந்தினார் ஒண்டிப்புலி. அவரது வண்டி மாடுகளின் கழுத்து மணி ஓசை பெரும் சிரிப்பாய்ப் பேரொலியாய்ப் பின்னணி இசைத்து பின் மங்கித் தேய்ந்தது.

வளர்ச்சி :

இன்ஸ்பெக்டர் எல்லேக்குநாத பிள்ளை இரவுச் சாப்பாட்டை முடித்து விட்டு ஈஸிச்சேரில் சாய்ந்து கிடந்தார். வீட்டின் முன்வாசல் திண்ணையை ஒட்டிய தரைப்பகுதியில் பிரப்பங் கட்டிகளில் 'சாய்ப்பு' இறக்கி உட்கார வசதிப்படுத்தப்பட்ட இடம் அது. எப்பொழுதும் சுத்தமாகவே இருக்கும்.

அன்றிரவு அவர் பண்ணையார் ஒண்டிப்புலியா பிள்ளையைப் பற்றித்தான் எண்ணிக் கொண்டிருந்தார். அவர் மனம் தெம்பாகச் சிரித்தது.

"எஹ்! பண்ணையார் எல்லாரையும் போல என்னையும் எண்ணிக் கொண்டார்னு தோணுது. எல்லேக்கியா பிள்ளை குணம் என்னதுன்னு தெரியும்படி செய்யாமலா போவேன்........"

தன் நினைப்பின் தடத்திலே சுகநடை போட்ட மனம் தந்த இனிமையில் சொக்கியிருந்த இன்ஸ்பெக்டரைத் திடுக்கிட வைத்தது "ஐயய்யோ! காலே மேலே தூக்குங்க. நாற்காலி மேலே தூக்கி வையுங்க" என்ற அபாய அலறல்.

அவரது மனைவிதான் அப்படிக் கத்தினாள். சடக்கென்று காலை உயர்த்திக் கொண்ட பிறகுதான், "ஏன், என்ன விஷயம்?" என்று கேட்கத் தோன்றியது அவருக்கு. அதே வேளையில் அவர் பார்வை தரை மீது பதிந்தது.

அங்கே, அதோ, கறுப்பாக—வெகு வேகமாக—கோரத்தின் தனிஉருப் போல—ஓடுவது என்ன?

அவர் உடம்பிலே புல்லரிப்பு பிறந்தது.

ஸ்ரீமதி மீனாட்சியம்மா அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தாள், துடைப்பக் கட்டையைத் தேடித் தான். "மாடசாமி.... வேய் தேவரே ...... கப்பையாப் பிள்ளேய்!" என்று அவர் வாய் ஓலமிட்டுக் கொண்டிருந் தது—சேவர்களைக் கூவி அழைத்தது.

பலரும் ஓடி வந்தார்கள்.

"இதோ என்னமோ ஒண்ணு ஓடுதே ...கல் எடுத்துப் போட்டு அடியும் வேய்" என்று உத்திரவிட்டார் இன்ஸ் பெக்டர்.

தேவர் மின்னல் போல் பாய்ந்தார். அவரைச்செடி படருவதற்காக நட்டிருந்த பந்தல் காலில் ஒன்றை, பீம பலத்தோடு பிடுங்கிக்கொண்டு வந்து ஓங்கி அறைந்தார்.

வரும் ஆபத்தை இயற்கை நியதியின் இணையிலா நுண்ணுணர்வு புலப்படுத்திக்கொடுக்க. அந்த ஜந்து வேகமாக ஓடமுயன்று கொண்டிருந்தது. இடுக்கிகள் போன்ற முன்புற உறுப்புக்கள் இரண்டையும், கறு மெழு கிலே திரட்டி யெடுத்த சிறு குழவிக்கல் போன்ற உடலை யும், இரும்புத் தொடுப்பு போன்ற பெரிய வாலையும்—கூரிய கொடுக்கு வளைந்து நின்ற பகுதியைத் தூக்கிப் பிடித்தபடி—அது ஓட முயன்றது விசித்திரமாகத்தானி ருந்தது. இருந்தாலும் தேவர் கைவீச்சிலிருந்து அதனல் தப்ப இயலவில்லை.

'பொத்' தென்று போட்டார் தடியை. 'சதக்' கென்று ஓசை. நசுங்கிச் செத்தது அது. குனிந்து பார்த்த தேவர் "நட்டுவாக்காலியில்லா, எசமான்! எம்மா, எம்மாம் பெரிசு! இது கொட்டினல் என்ன ஆகி றது?" என்று வியப்புக் குரல் கொடுத்தார்.

மற்றவர்களும் அதைக் குனிந்து கவனித்து ஆராய்ச்சி நடத்தினர்கள்.

"ராசப்பய இது! என்ன ஓட்டம் ஓடிச்சு பார்த்தீர்களா! விசம் ஐயா விசம். அது கொடுக்கைத்தான் பாருங்களேன்!" என்று வாய் பிளந்து நின்றார் சுப்பையாப் பிள்ளை.

மாடசாமி 'நட்டுவாக்காலி' கடித்துச் செத்துப் போனவர்களைப் பற்றி அளந்துகொண்டிருந்தான்.

திண்ணைத் தூணிலே குறுகுறு வெனச் சாய்ந்து உட்கார்ந்து விட்ட மீனாட்சியம்மா பெருமூச்செறிந்தாள். "கோமதி அம்மன்தான் காப்பாத்தினா. அவதான் என்னைத் திண்ணைப்பக்கம் கூட்டியாந்து விட்டா........ இவொ என்னசெய்யிதோன்னு பார்க்க நான் வெளியே வந்தேன். சட்டுனு கண்லே பட்டது. கறுப்பா ஒண்ணு ஓடியாறது தெரிஞ்சுது. இவொ காலுக்கிட்டே வந்திட்டுது. இன்னும் கொஞ்சம் தாமதிச்சிருந்தா இவொ காலிலே ஒரு போடு போட்டிருக்கும். எனக்கு மேலு நடுக்குச்சு. என்னது சொல்லணும், ஏது பேசணுமின்னே தோணலே. 'காலைத் தூக்குங்க, தூக்குங்க' யின்னு கத்தினேன்........ இவ்வளவு பெரிய நட்டுவாக்காலியை நான் பார்த்ததே கிடையாதம்மா!........கோமதித் தாய்க்கு இந்த ஆடித் தவசுக்கு ரெண்டு ரூபா கொடுத்து அனுப்பணும். இப்பவே ரூபாயை எடுத்து முடிஞ்சு வச்சிரணும்" என்று பேசிக் கொண்டிருந்தாள் அவள்.

எல்லைக்குநாத பிள்ளை ஒன்றுமே பேசவில்லை. கொஞ்ச நேரம். அவர் கண்கள் ஜீவனற்று, இயக்கமற்று, கரு மொந்தையாகி—தான் சிதறிய ஒருவிதத் திரவ பதார்த்தத்திலே நனைந்து—கோரமாய் அருவருப்பும, அச்சமும் தருவதாய் கிடந்த சடலத்தின் மீதே பதிந்திருந்தன. சற்று நேரத்திற்கு முன்பு அதன் அங்கங்களிலே இருந்த இயக்கமென்ன! அச்சம் எழுப்பிய சக்திதான் என்ன! ஆபத்துக்கு இரையாகிச் சாகாமல்

இருந்திருப்பின் இதற்குள் அது எத்தகைய ஆபத்தை விளைவித்திருக்குமோ!........

அவர் பெருமூச்செறிந்தார். பெரிய ஆபத்திலிருந்து தப்பிவிட்டவனின் உடல் விதிர் விதிர்ப்பு நீங்காது நடுங்குவது போலவே அவர் தேகமும் நடுங்கியது. மேல் பூராவும் வேர்வை பொடித்திருந்தது. உள்ளத்தின் பயத்தைப் பதுக்கி விடுவதற்காக அவர் ஆர்ப்பாட்டமாகக் கத்தினார்.

"சவத்தைத் தூக்கி உரக் கிடங்கிலே போடாமே, இன்னம் என்னவேய் பார்வை? மாடசாமி, அதை எடுத்து வீசி எறி ......தேவரே, ஒரு வாளித் தண்ணி கொண்டாந்து அந்த எடத்தைத் துப்புரவாக் கழுவிவிடும். விசம் இருந்தாலும் இருக்கும்........உரக் கிடங்கிலேயிருந்து தான் வந்திருக்குமோ என்னமோ! நாளைக்கு உரத்தை எடுத்துப் போக மொட்டை வண்டி கொண்டாரும். என்ன சுப்பையாப் பிள்ளை, உம்ம கிட்டேத்தான் சொல்லுகிறேன்....... இனி உரக் கிடங்கு இங்கே இருக்கப்படாது. வாய்க்காலடித் தோட்டத்திலே பள்ளம் வெட்ட ஏற்பாடு செய்யும்....மீனாட்சி, கொஞ்சம் நீத்தண்ணி கொண்டாயேன்........"

தேவர் கட்டுவாக்காலியை அப்புறப்படுத்திய பிறகு கூட அதைப் பற்றிய பேச்சு நிற்கவில்லை.

எல்லைக்குநாதரின் நினைவு பண்ணையாரை எட்டியது. அதே சமயத்தில் தேவர் சொன்னார்: "பண்ணையார் ஒண்டிப்புலியா பிள்ளை இருக்காரே, அவரு, எவ்வளவு பெரிசா இருந்தாலும் சரி; கட்டுவாக்காலியை அப்படியே கையிலே தூக்கிக்கிடுவாரு. கிளிக்குஞ்சோடு கொஞ்சுகிற மாதிரித்தான் அவருக்கு........"

இன்ஸ்பெக்டரின் உடல் சிலிர்த்தது. உள்ளத்திலே சிறு உதைப்பு.

பக்கத்துத் தோட்டத்தில் ஓங்கி வளர்ந்து நின்ற வாதநாராயண மரத்தின் கிளையிலிருந்து ஓர் ஆந்தை ஒற்றைக் குரல் கொடுத்தது. மறுபடியும் அலறிவிட்டுப் பறந்து விட்டது!

எல்லைக்குநாதருக்கு ஏனோ பண்ணையாரின் தனி ரகச் சிரிப்பொலிதான் நினைவுக்கு வந்தது.

'மாடசாமி! இந்த வாதமடக்கி மரத்தின் கொம்புகளை வெட்டிப்போடு என்று எத்தனை தரம்சொன்னேன்? நாளைக்கு முதல் காரியமா அதைக் கவனி....... ஆந்தை வந்து அடைஞ்சுக்கிட்டு.... சே!' என்று சினக்குரல் காட்டினார் அவர்.

'ஆகட்டும், எசமான்!' என்றான் மாடசாமி.

"இப்பதான் வேலை ஒண்ணுமில்லையே. எல்லாரும் வீட்டுக்கே போகலாம்" என்று அனுமதி கொடுத்து அனுப்பி வைத்தார் இன்ஸ்பெக்டர். ரொம்ப நேரம் வரை அவர் மனசு சரிப்படவேயில்லை.

* * * *

மிகவும் விசித்திரமாகத்தான் தோன்றியது—

அந்த வீட்டிலே அதுவரை விஷ ஜந்துக்களின் நடமாட்டம் இருந்ததே இல்லை. நட்டுவாக்காலி வந்த தினத்திற்குப் பிறகு அடிக்கடி ஒன்று இல்லாவிட்டால் ஒரு பூச்சி விஜயம் செய்வது சகஜமாகிவிட்டது.

விஷ ஜந்துக்களின் திருவிழா நடப்பதற்குக் கொடியேற்றிவைத்து முதல் ஆஜர் கொடுத்த பெருமையை 'நண்டுத் தெறுக்கால்' எடுத்துக்கொண்டதால் இந்த விசேஷ விழாவின் 'முள்ளுப் பொறுக்கிச்சாமி' அதுதான். "திருவிழா முதல் நாளிலே தெருக்களைப் பார்ப்பதற்கு அப்படி ஒரு சாமி வருமே, அது மாதிரி! தேளுகதான்

'சிவுலி'. ஏன்னு கேட்டா அடிக்கடி வந்து சாகுதுக தேளுக. தேரோட்டமாக எது வருமோ? பாம்பு வந்தாலும் வரும்!"—இப்படிக் கேலி பேசினார் எல்லேக்குநாதர்.

"இதுமாதிரி எல்லாம் பேசாதிங்க. இந்த வருஷம் தவசுக்கு நாமளே நேரே சங்கரன் கோயிலுக்குப் போயி, கோமதி அம்மனுக்குச் செஞ்சிட்டு வாறதுதான் நல்லது. அம்மனுக்கு ஏதோ நம்ம பேரிலே கோபம் ஏற்பட்டிருக்கு" என்றாள் மீனாட்சி.

பிள்ளை கனைப்புச் சிரிப்பு சிந்தினார். சொன்னார்: 'இது உங்க கோமதி அம்மன் கோபம் இல்லே, மீனு. எங்க குட்டிச் சாத்தானின் கோபம் செய்கிற காரியம்னு தான் எனக்குத் தோணுது....'

'சுக்கே மிக்கேன்னு உளறாதீங்க!' என்று சிடுசிடுத்தாள் ஸ்ரீமதி.

அவள் பேச்சை ஒடுக்கும்படியாக அடித்துப் பேச வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிடவில்லை என்று எண்ணிய எல்லேக்குநாதர் மௌனமானார்.

எனினும் அவர் மனம் சும்மா இருக்கவில்லை; பண்ணையார் ஒண்டிப்புலியைப் பற்றி இஷ்டம்போல் எண்ணிக் கொண்டிருந்தது. மந்திர தந்திரங்களைப் பற்றி, யட்சிணி வேலைகளைப் பற்றி, குறளிக் கூத்துக்களைப் பற்றி, ஏவல் லீலைகளைப் பற்றி, எல்லாம் நினைவுப் பின்னலை இழைய விட்டது; 'ஒண்டிப்புலி இது மாதிரி விவகாரங்களில் ஈடுபாடு உள்ளவன் தான்; அதில் சந்தேகமே கிடையாது' என்று முத்திரை குத்தியது.

எல்லேக்குநாதர் இவ்விதம் எண்ணியதில் நியாயம் இருந்தது. நட்டுவாக்காலி விஜயம்செய்த நாள், அவர் பண்ணையாருக்கு விரோதமாகச் செயல் புரிந்த தினம்

தான். எல்லாம் பண்ணையாருக்குப் பாதகம் விளைவிக்கக் கூடிய முறையில் நடவடிக்கை எடுக்க நேரிட்டபோதெல்லாம்—தேளோ, பூரானோ, ஜலமண்டலியோ வந்து பயமுறுத்தியது விஷ ஜந்து எதுவும் அவரைக் கடிக்கவோ கொட்டவோ இல்லை. அதுவரையில் அதற்குத் தனது மனைவியின் பிரார்த்தனையும், தனது நல்லதனமும்தான் காரணம் என்று நம்பினார் அவர்.

“இதுவரை தீங்கு எதுவும் ஏற்படவில்லை என்பதனால் இனியும் தீமை விளையாது என்று தெம்பாகத் திரிய முடியாது. ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது அவசியம்” என்று நினைத்தார் அவர்.

இன்ஸ்பெக்டர் எல்லைக்குநாத பிள்ளை உத்தியோகத் தோரணையில் பண்ணைக்காடு வட்டாரத்தை ‘இன்ஸ்பெக்ட்’ செய்யத் தேதி குறித்திருந்தார். அதைப் பண்ணையாருக்கும் அறிவித்திருந்தார்.

இன்ஸ்பெக்டர் தன்னுடைய வீட்டிலேயே தங்கலாம்; சகல வசதிகளும் செய்து தர முடியும்; மறுநாள் வேட்டைக்குப் போகலாம் என்று பண்ணையார் தெரிவித்தார், ஓர் ஆள் மூலம்.

‘எல்லைக்குநாத பிள்ளை இப்பொழுது இன்ஸ்பெக்டர் தோரணையில் வருகிறார். அதனால் பண்ணையாரின் அதிதியாகத் தங்க முடியாது. பரிசோதனைகளில் ஈடுபட்டுத் திருட்டுக் கேஸ்களைக் கண்டு பிடிப்பதுதான் இன்ஸ்பெக்டர் கலந்துகொள்ளக் கூடிய வேட்டை. மலை அணிலையும், பழந்தின்னி வௌவாலையும், முயல்களையும், வக்கா கொக்கு, குருவிகளையும் கொல்லுகிற வேட்டை எல்லைக்குநாதனுக்குப் பிடிக்காது’ என்று எழுதி அனுப்பிவிட்டார் பிள்ளை.

அவர் பிரயாணத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். சேவகர் இசக்கித் தேவர் பூட்ஸ்களைத் தட்டித் துடைத்

துக் கொண்டிருந்தார். எதையும் துருவித் துப்புரவாகச் சுத்தம் செய்தால்தான் தேவருக்குத் திருப்தி. பூட்ஸ்களையும் கால் மணி நேரமாகத் தட்டிக் கொட்டி வேலை செய்து கொண்டிருந்தார் தேவர்.

"என்னவே தேவரே, பூட்ஸ் கிளீன் பண்ணை இவ்வளவு நேரமா?" என்று கேட்டபடி வந்து சேர்ந்தார் பிள்ளை.

"இதோ ஆச்சு எசமான்!" என்று சொல்லி ஒரு பூட்சைக் குப்புறக் கவிழ்த்துத் தட்டினார் தேவர்.

"என்ன தேவரே! அதுக்குள்ளே என்னதான் இருக்கும்னு நெனச்சிரு? எதையோ தேடுத மாதிரியில்லா கொட்டிக் கவிழ்த்துத் தட்டி........"

அவர் வாய் மூடவில்லை, வெளியே வந்து விழுந்தது ஒன்று. சிறுசாக, வெள்ளை வெளேரென்று—ஒரு தேள்!

"பார்த்தேளா, எசமான், இதைத்தான் ராசாத் தேள் என்பாக. இது கொட்டுச்சோ, அவ்வளவுதான். பத்தே நிமிசத்திலே ஆளு அவுட்டு...."

அத் தேள் இயக்கமற்றுக் கிடந்தது ஒரு கணம். வட்டமிட்டுச் சுற்றியது, திசை காண முயல்வது போல. வேகமாக ஓடத் தொடங்கியது—இன்ஸ்பெக்டர் நின்ற பக்கமாக.

"வே வே ஓடுது வேய்!"

'அது உசிரே இதோ ஓடுது பாருங்க' என்றார் தேவர், ஒரு அறை; பூட்ஸ் நசுக்கியது தேளை; ஒரு தேய்ப்பு. 'ராஜாத் தேள்' துவையலாகிவிட்டது!

"எசமான், எங்கே போனாலும் எங்கே நின்னாலும், இன்ஸ்பெக்ஷன் சமயத்திலே என்னையும் பக்கத்திலேயே நிக்கச் சொல்லிடுங்க. என்னை வேறே டூட்டிகளுக்கு அனுப்பிப் போடாதிங்க" என்றார் தேவர்.

இன்ஸ்பெக்டரின் உடலில் 'நடுக்கம்' ஏற்பட்டது. 'ஏன் தேவரே, ஏன் அப்படிச் சொல்லுதிரு?' என்று கேட்டார்.

தேவர் தயங்கித் தயங்கிச் சொன்னார்: "ஒண்டிப் புலியா பிள்ளை பெரிய ஆளு. ஆளுக்குள்ளே ஒம்பது ஆளுங்கிற கணக்கிலே அவரு. அவருகிட்டே பழகும் போது ஜாக்கிரதையாப் பழகணும். பகைச்சுக்கிடுறவங்களோ ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும்....எசமானுக்கு நான் சொல்லியா தெரியணும்!"

எல்லைக்குநாதர் திடீரென்று கேட்டு வைத்தார் "உமக்கும் மந்திர தந்திரங்களிலே பயிற்சி உண்டோ, தேவரே?" என்று.

"இப்படித் திட்டாந்தமாகக் கேட்டால்?" என்று புடனியைச் சொரிந்தார் தேவர்.

"என்னமோ தோணுச்சு. நீரு பூட்டைத் தேடித் துருவியதுக்கும, தேளு வந்ததுக்கும் ஏதோ தொடர்பு இல்லாமலா இருக்குமுன்னு நெனைச்சேன். அதுதான்."

தேவர் 'நமுட்டுச் சிரிப்பு' சிரித்தார். "நல்ல பயிற்சியின்னு சொல்ல முடியாது. ஏதோ தெரியும்னு வைச்சுக்களேன். ஆனால் பண்ணையாரு பெரிய கை ஆச்சுதே எசமான்!" என்றார்.

இன்ஸ்பெக்டர் பதில் எதுவும் சொல்லவே இல்லை.

* * * *

ஒண்டிப்புலியா பிள்ளை மீது சந்தேகம் ஏற்பட்டு விட்டதால், எல்லைக்குநாதர் பண்ணையாரைக் கொஞ்சம் கூட நம்புவதில்லை; "அவன் வீட்டில் சோறு தண்ணிகூட உண்பதில்லை" என முடிவு செய்து விட்டார்.

விஷப் பூச்சிகளின் உதவியாலே மனுஷனைத் தீர்த்துக் கட்டினால், சாட்சிகளோ சந்தேகத்துக்குக் காரணங்களோ

ஏற்படாதுன்னு அவன் எண்ணியிருக்கலாம். காரியம் மிஞ்சிப் போகிறபோது விஷம் கொடுத்தாவது முடித்து விடலாம் என்று நினைக்கத் தயங்கவா போகிறான்? குழம்பு கொதிக்கிறபோது அதிலே அரணையைப் புடிச்சிப் போட்டிருந்தான்னு வையும். எப்படித் தெரியப் போவுது?'' என்று வாதித்தது அவர் மனம்.

ஆகவே, மனைவி தயாரித்துக் கொடுத்த சித்திரான்னங்களையே சாப்பிட்டார். சுப்பையாப் பிள்ளை கிணற்றிலிருந்து எடுத்து வந்த தண்ணீரையே குடித்தார் இன்ஸ்பெக்டர்.

“இன்ஸ்பெக்டர்வாள் ரொம்ப ஆசார சீலராக மாறி இருக்கிறாப்போலத் தோணுதே!'' என்றார் பண்ணையார். பழைய சிரிப்பே சிந்தினார். இன்ஸ்பெக்டர் தன்னைச் சந்தேகிக்கிறார் என்பதை ஊகித்துவிட்டார் என்றே தெரிந்தது.

“நீங்க நியாயத்துக்காக ரொம்பவும் பாடு படுறீங்க, ஸார்!'' என்று எடக்கு மொழி புகன்றார் ஒண்டிப்புலி.

“அநியாயத்துக்காகப் பாடுபடுவதை விட இது நல்லதுதானே!'' என்று சொல்லி, எல்லைக்குநாதர் பண்ணையாரின் முகத்தையே கவனித்தார்.

“ஹெஹ்ஹ! ஆமா, நல்லதை எல்லாம் அனுபவிக்க முடிகிறது யாராலேயோ? நியாயத்துக்காக உழைக்கிறவங்க ரொம்பவும் கஷ்டப் படுவாங்க என்று கேள்வி. அது நிசந்தானா ஸார்?''

“இருக்கலாம்.''

“நியாயம் என்று நேர்மையாக வாழும்போது கஷ்டம். அநியாயமான வகைகளில் வாழ்ந்தாலோ எவ்வளவோ லாபங்கள் கிடைக்கும். விசித்திரமான வாழ்க்கை முறைதான், சரி, இப்படி வாழ்க்கையே நியாயத்துக்கு

நன்மை வழங்கத் தயங்குகிற போது, மனிதன் ஏனய்யா நியாயம் நியாயம் என்று சொல்லிக் கஷ்டப் படணும்? அதுதான் என் கேள்வி'' என ஓங்கி அறைந்தார் ஒண்டிப் புலி.

''நல்ல கேள்விதான். ஆனால், கடவுளைக் கேட்க வேண்டிய கேள்வி இது. அல்லது இப்படி வாழ்க்கை முறையை அமைத்துவிட்ட சக்தியை—லைப் போர்ஸ் என் பார்களே, அதைக்—கேட்க வேண்டிய கேள்வி!'' என்றார் எல்லைக்குநாதர்.

''அது கிடக்குது ஸார். உங்களைப் பற்றிச் சொல் லுங்க. நீங்க வாழ்க்கையை அனுபவிக்க விரும்ப வில் லையா?''

''என் இஷ்டம்போல்—எனக்குச் சரி என்று பட்ட வழியிலே—நான் நன்றாக வாழ்கிறேன்.''

''அப்படியா சொல்கிறீர்கள்?'' என்று ஒரு ரகமாகப் பார்த்தார் பண்ணையார்.

''பண்ணையார்வாள்! உலகம் பல விதம், மனிதர் கள் ரகம் ரகம். அதிலே நீங்க ஒரு தினுசு. உங்களுக்கு நேர்மாறான ரகம் நான். நாம் இரண்டு பேரும் சந்திக்க நேர்ந்திருப்பது கூட வாழ்க்கையின் வேடிக்கையான போக்குகளில் ஒன்றுதான்; இல்லையா?'' என்று கேட்டு விட்டு, உரக்கச் சிரித்தார் எல்லையா பிள்ளை.

உயிரற்ற சிரிப்பு படர்ந்தது ஒண்டிப்புலியின் முகத் திலே. அவர் பேச்சை மாற்ற முயன்றது, அவரது குர லிலே தொனித்தது.

''பண்ணைக்காடு வளமான பிரதேசம், இஷ்டம்போல் அனுபவித்து வாழ, சகல வசதிகளும் கிடைக்கக்கூடிய சொர்க்கம் இது. பழங்கள் சாப்பாட்டுப் பொருள்கள் எல்லாம் அருமையானவை. வாசனைக்கு இந்தப் பக்கத்

துச் சந்தனத்துக்கு ஈடானது வேறே கிடையாது. மலைப் பகுதியிலே மேஞ்சிட்டு வர்றதுனாலே இங்குள்ள பசுமாடுகள் கொடுக்கிற பாலின் சுவையே தனி, அதேமாதிரி தான் இந்தப் பக்கத்துப் பொம்பிளேகளும். இயற்கையிலேயே மினுமினுப்பும் உடற்கட்டும் சதைப்பற்றுமாக —இன்பச் சுரங்கங்களாக—இருக்கிறாங்க. அதிலும், மலைப்பாங்கிலே வேலை செய்து உடல் வலு ஏறிய குட்டிகள்—ரொம்ப ஷோக்கு வாய்ந்தவங்க....உங்க கிட்டேப் போயி இதை எல்லாம் சொல்றேனே! உங்களுக்கு இதிலே லயிப்பு இருக்கவா போவுது! ...... மாசிலாமணியா பிள்ளேன்னு ஒரு இன்ஸ்பெக்டரு இருந்தாரே, அவுரு மாசத்திலே பதினேஞ்சு நாள் இங்கே வந்திருவாரு. இங்கே வராத நாட்களிலே, ரகம் ரகமா சரக்குகளை அங்கேயே வரவழைச்சுடுவாரு. அர்ச்சுன ராச வாரிசு அவுரு........"

பண்ணையார் வேறு வகையில் வலைவீசித் தன்னை விழுத்தாட்டலாமா என 'ஆழம் பார்க்கிறார்' என்பது இன்ஸ்பெக்டருக்கா புரியாது!

"அதுதான், உலகம் பலவிதம்னு சொன்னேனே.... ஆமா. நீங்க எல்லாத்தையும் வர்ணிச்சீங்களே. ஒன்றைச் சேர்க்க மறந்து போயிட்டீங்களே!" என்றார் அவர்.

ஆவலோடு "என்னது? எதைச் சொல்றீங்க?" என்று கேட்டார் பண்ணையார்.

"இங்கே விஷப்பூச்சிகள் அதிகம். அவை கூடத் தனிரகமானவைதான். ஆளைத் தேடித் தேடி துரத்தும் குணமுள்ளவை. இந்த விஷயம் கூட உங்களுக்குத் தெரிஞ்சிருக்கணுமே?"

இப்படிச் சொல்லிவிட்டு எல்லைக்குநாதர் கண்களைச் சிமிட்டினார், சிரித்தார்.

பண்ணையாரின் கண்கள் இன்ஸ்பெக்டரை மேலும் கூர்மாக ஆராய்ந்தன. அவர் பார்வையின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ள முயல்வது போல் முறைத்தன பின், இயல்பான பார்வை குடி கொண்டது அங்கு.

ஒண்டிப்புலி சிரித்தார். தனிரகப் பெருஞ் சிரிப்பு தான்.

* * * *

அன்று மாலை........

எல்லைக்குகாதரும் ஒண்டிப்புலியும் சும்மா உலாத்தி விட்டுத் திரும்பும் வேளை. இசக்கித் தேவரும் இன்ஸ்பெக்டரின் பின்னாலேயே நடந்தார். தேவரின் கண்கள் சும்மா இருக்கவில்லை. விழிப்புடன் சுழன்று புரண்டன.

"இந்தப் பூவைப் பார்த்தீர்களா?" என்று ஒரு செடி அருகே போனார் ஒண்டிப்புலி. இன்ஸ்பெக்டரும் சென்றார்.

தனிரகமான பூக்கள் தான். பெரிதாகக் கவர்ச்சிக்கும் வர்ணத்துடன், அழகாக ஒளிவீசித் திகழ்ந்தன அவை. மணமும் இருந்தது.

"இதுமாதிரிப் பூவை இதற்கு முன் நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள், இல்லையா? இந்தப் பக்கத்துக்கு விசேஷமான சிறப்பு தருபவற்றில் இதுவும் ஒன்று" என்றார் பண்ணையார்.

பூவையே பார்த்து ரசித்தபடி நின்றார் இன்ஸ்பெக்டர். கவனித்தபடி நின்ற பண்ணையாரின் கண்களில் திடீரென்று கனல் ஒளி தெறித்தது. உதடுகளில் சிரிப்பு மிதந்தது. சற்று விலகி நின்று, இன்ஸ்பெக்டர் முகத்திற்

கும் செடியில் ஓர் இடத்திற்குமாகக் கண்களை மேயவிட்டு மகிழ்ந்தார் அவர்.

'சொதக்' என்று ஒலி பேதம். வேகமான வீச்சு. செடியின் கிளை ஒன்று முறிந்து விழுந்தது. அதிலிருந்து துள்ளித் தெறித்தது ஒன்று—பச்சை நிறக்கொடி போல்; செடியின் ஒரு பகுதி போல....

கடுகடுப்புடன் திரும்பினார் பண்ணையார். திகைப் போடு நோக்கினார் இன்ஸ்பெக்டர்.

தடியை லாகவமாகச் சுழற்றி வளைவு ஏற்படுத்திய தேவர் வேகமாக முன்வந்து, துள்ளி விழுந்த அதிர்ச்சி யில் கிடந்து, தெளிவுற்று ஓட முயன்ற, பச்சைப் பாம்பை ஓங்கி அறைந்து கொன்றார்.

"கண்குத்திப் பாம்பு, எசமான். பூவுக்கு மேலே இருந்து எட்டிப் பார்த்தது. கொத்தினால் உங்க கண்ணைத் தானே கொத்தும்; பேஷாக் கொத்தட்டுமே என்றோ என்னவோ எச்சரிக்கை செய்யாமலே பண்ணை எசமான் வேடிக்கை பார்த்துச் சிரிச்சபடி நின்றார். நான் அப்படி நிற்க முடியுமா, எசமான்?" என்று பவ்யமாக—ஆனால், குத்தும் வகையிலே—சொன்னார் இசக்கித் தேவர்.

இன்ஸ்பெக்டர் பார்வையினால் நன்றியை அறிவித் தார். பண்ணையாரை அவர் பார்த்த பார்வையிலே வெறுப்பும் கோபமும் ஒளியிட்டன.

இரவு நேரம்.

இன்ஸ்பெக்டர் எல்லைக்குநாத பிள்ளை ரிப்போர்ட்டு எழுதிக்கொண்டிருந்தார்.

அப்போது அவர் பண்ணைக்காட்டுச் சத்திரத்துத் திண்ணையில், ஓர் ஈஸிச் சேரில் உட்கார்ந்திருந்தார். அந் நாற்காலியின் நீண்ட கைகளின் குறுக்கே ஒரு

பலகையைப் போட்டு, எழுதச் சௌகரியமான மேஜையாக மாற்றியிருந்தார். அதன் பக்கத்திலே ஸ்டூல் மீது அரிக்கன் லாம்பு எரிந்து கொண்டிருந்தது. விளக்கின் அருகே சில 'கேஸ் கட்டு'களும் நோட்டுகளும் இருந்தன.

பண்ணைக்காட்டைப் பரிசோதித்துத் தாம் கண்டவைகளைப் பற்றியும், பண்ணையாரைக் குறித்தும் விரிவாக எழுதி முடித்திருந்த இன்ஸ்பெக்டர் அதைத் திரும்பப் படித்துக் கொண்டிருந்தார்.

"பண்ணையாரிடம் இப்படி இப்படி எழுதியிருக்கிறேன் என்று சொல்லிவிட வேண்டியதுதான். அவரைப் போலக் கோழைத்தனமாகப் பதுங்கியிருந்து தாக்குகிற சுபாவம் நம்மிடம் கிடையாது" என்று மனசோடு புலம்பி வைத்தார் பிள்ளை.

ஒரு மூலையில், விளக்கின் கதிரொளி மூஞ்சியில் படாதவாறு, உட்கார்ந்திருந்தார் சேவகர் இசக்கித் தேவர். அங்குமிங்கும் பார்வை எறிந்துகொண்டிருந்த தேவரின் கண்கள் சடக்கென்று, ஸ்டூல் மீது ஏற்பட்ட ஒருவித அசைவினால் கவரப்பட்டன. காகிதக்கட்டுகளினூடே என்னவோ ஒன்று ஊர்ந்து தலையை மேலே தூக்கி எட்டிப் பார்த்துவிட்டு உள்ளே இழுத்துக்கொண்டது போல் தெரியவே தேவர் கூர்ந்து கவனித்தார்.

"எசமான், ஸ்டூலிலே காகிதக்கட்டுக்களுக்கு நடுவிலே ஏதாவது இருக்குதோ?" என்று கேட்டார்.

அலட்சியமாகப் பார்த்துவிட்டு "ஒண்ணுமில்லையே!" என்றார் எல்லைக்குநாதர்.

"இல்லை எசமான், என்னவோ ஒண்ணு ......" என்று இழுத்தபடி, தேவர் எழுந்து ஸ்டூலின் அருகே வந்து குனிந்து பார்த்தார். "இங்கேயேதான் இருக்குது. எமப்பய இது. என்னமாக் கட்டோடு கட்டாக ஒட்டி

கிட்டுது பார்த்தீர்களா!" என்று வியப்புச் சொல் உதிர்த்துவிட்டு அங்குமிங்கும் கவனித்தார்.

"என்னது வேய் தேவரே?"

"பாம்பு, எசமான்!"

"ஆங்" என்றார் இன்ஸ்பெக்டர். "உம்ம கண்ணிலே தான் எல்லாம் படுது வேய். இது எங்கே—' என்று ஆரம்பித்தவர், 'ஓ! இங்கே இருக்காரோ! சரிதான்" என்று தலையசைத்தார். ஈஸிச் சேரின் மறுபக்கம் கீழே தரையில் கிடந்த 'ரூல் தடி'யை எடுத்துத் தேவரிடம் கொடுத்து, 'விருந்தாளியைக் கவனியும் தேவரே!' என்று சொல்லிவிட்டுச் சிரித்தார்.

காகிதக் கட்டுகளினூடே ஊர்ந்தது பாம்புக்குட்டி ஒன்று. மீண்டும் தலையைத் தூக்கி எட்டிப் பார்த்தது. அதன் கன்னங்கரிய கண்மணிகள் விளக்கொளியில், இரண்டு சொட்டு மைத்துளிகள் போல் மினுமினுத்தன. அதன் சருமம் கூட மின்னியது. அதையே கவனித்து நின்ற தேவர், அதன் தலை வசமாகப் படிந்ததும், ரூல் தடியைப் பதித்து அழுத்தித் திருகினார். பலமாக அழுத்தினார். பாம்புக்குட்டி துள்ளித் துடித்து, வாலைச் சுழற்றிச் சுழற்றி அடித்தது. தடிமீது சுற்றிச் சுழன்று சுழன்று விழுந்து துடித்தது; ஓய்ந்து சுருண்டது; பலமாகத் துடித்துப் பின் ஒடுங்கியது.

"சவமே தொலைஞ்சியா?" என்று மீண்டும பலமாக அழுத்தினார் தேவர். அது அசையவே இல்லை.

தடியை நீக்கினார். பாம்புக்குட்டியின் தலை நசுங்கிக் கிடந்தது. 'சனியன் செத்தது!' என்று முனங்கினார் தேவர்.

விளக்கைத் தூக்கி, ஒளி நன்றாக அதன்மீது விழும்படியாகப் பிடித்த இன்ஸ்பெக்டர், "இது என்ன பாம்ட

தேவரே: மேலெல்லாம் என்னமோ மாதிரித் தெரியுதே" என்றார்.

"இதுதான் கட்டுவிரியன். இது கடிச்சா உடம்பெல்லாம் அதுமேலே கிடக்கிற மாதிரி தடிப்பு தடிப்பா—பத்துப் பத்தாக—வீழுமின்னு சொல்லுவாங்க........"

"அப்படியா" என்றார் பிள்ளை. "இது எப்படி வே உம்ம கண்ணிலே பட்டுது? நான் கவனிக்கவே இல்லியே!"

"இந்தப் பக்கமே பார்த்தபடி இருந்தேனா? என்னமோ அசைகிற மாதிரித் தெரியுதேன்னு பார்த்தேன் ... ..."

தேவரின் பேச்சு தடைப்பட்டுவிட்டது, "என்ன இன்ஸ்பெக்டர்வாள்! சாப்பாடெல்லாம் முடிஞ்சுதா?" என்று விசாரித்தபடி பண்ணையார் புகுந்ததனால்.

"வாங்க!" என்று சொல்லிவைத்தார் இன்ஸ்பெக்டர்.

"தேவரே, இந்த ரிக்கார்டுகளைத் தூக்கி இந்தப் பக்கமா வச்சிரும். பாம்புக்குட்டியை வெளியே எறியும். ஸ்டூலிலே உட்காருங்க பண்ணைப் பிள்ளைவாள்!"

"பாம்புக்குட்டியா!" என்று ஆச்சர்யப்பட்டார் ஒண்டிப்புலி. "ஏது, இன்ஸ்பெக்டர் ஸார். உங்களுக்கும் பாம்புக்கும் ரொம்ப ராசியோ? உங்ககூட அதிகமா உறவு கொண்டாட வாராப்போலத் தெரியுதே! ஹஹ, போன ஜன்மத்திலே நீங்க பாம்புப் பிறவி எடுத்திருப்பீக போலிருக்கு" என்று சொல்லிச் சிரித்தார்.

எல்லைக்குறாத பிள்ளை பண்ணையாரை ஒரு தினுசாகப் பார்த்தார். "எல்லாம் உங்க உறவு ஏற்பட்ட பிறகு வந்து சேர்ந்த பாக்கியம்தான் ஒருவேளை, நீங்க இந்தப் பிறவியிலேயே பாம்புக்குத் தாயாதியாக இருப்பீர்களோ என்னவோ!" என்றார்.

'ச்ளக்!' என்றொரு சிரிப்பு உதிர்ந்தது. தேவர்தான் அப்படிச் சிரித்தார்.

பண்ணையார் திரும்பி கவனித்தார். நூல் தடி நுனியில் செத்த பாம்பைத் தொங்க விட்டபடி நின்ற தேவரைப் பார்க்கப் பார்க்க அவருக்கு எரிச்சலாக வந்தது. "ஏன்யா அதை அப்படிப் புடிச்சிக்கிட்டுத் திவட்டித் தடியன் மாதிரி நிற்கிறே? தூரக்கொண்டுபோய்ப் போடேன்" என்று எரிந்து விழுந்தார்.

தேவரின் கண்களிலே குரோதம் பொங்கிக் கனன்றது ஒரு கணம். அதை யாரும் கவனித்திருக்க முடியாது. நிற்கும் அவரது முக பாவங்களை எடுத்துக் காட்டப் போதுமான விளக்கு வெளிச்சம் தேவர் மீது படியவில்லை.

தேவர் எடக்காகப் பேசினார்: "பண்ணை எசமான் பாம்பு ஆராய்ச்சி பண்ண விரும்பினாலும் விரும்பலாம். அதனாலேதான் காத்து நிற்கிறேன்!"

'மடையன்' என்று முனங்கினார் ஒண்டிப்புலி.

தேவர் அலட்சியமாகச் சிரித்துவிட்டு வெளியே போனார். கொஞ்ச நேரத்தில் திரும்பிவந்து, மூலையிடத்தில் உட்கார்ந்து கொண்டார்.

இன்ஸ்பெக்டர் ரிப்போர்ட்டில் எழுதியிருப்பதைச் சொல்லத் தொடங்கவும், "உங்க ஆளை வெளியே போய் இருக்கச் சொல்லுங்களேன்"—என்று கேட்டுக்கொண்டார் பண்ணையார்.

"சும்மா இருக்கட்டுமே!" என்று ஒதுக்கி விட்டார் இன்ஸ்பெக்டர்.

"ஒரு முக்கிய விஷயமாகப் பேசணும்; அதுக்காகத் தான் இப்ப வந்தேன்."

"தேவரு இங்கே இருக்கிறதுனாலே ஒண்ணும் கெட்டுப் போகாது. நம்ம சொல்லுங்க."

பண்ணையாருக்கு வேறு வழி இல்லாமல் போயிற்று. இருந்தாலும் குத்தலாகச் சொல்லி வைத்தார்: "வேலைக் காரனை எல்லாம் வைக்கிற இடத்திலே வைக்கணும் ஸார். இல்லேன்னு சொன்னா......"

"தேவர் வேலைக்காரன் இல்லை ...நீங்க பேசவேண்டிய விஷயம் வேறே ஏதாவது இருந்தால் பேசுங்கள்"— எல்லைக்குநாதரின் குரல் கடுமை பெற்றிருந்தது.

பண்ணையார் தலையைச் சொரிந்துகொண்டார். விளக்கைப் பார்த்தார். வெறும் வெளியைக் கவனித்தார்: இன்ஸ்பெக்டர் முகத்தின் மீது வேகப்பார்வை ஒன்று வீசிவிட்டுத் தன் கைவிரல்களைக் கவனிப்பதில் ஈடுபட்டார். பிறகு தொண்டையைக் கனைத்துச் சரிசெய்து கொண்டு சொன்னார்—

"இன்ஸ்பெக்டர் ஸார்! நாம் ரெண்டு பேரும் நண்பர்களாகவே பழகலாம் நீங்க என் மீது வீணான சந்தேகம் கொண்டிருப்பதாகத் தெரியுது. என் கூட நீங்க பழகிப் பார்த்தது இல்லே. மனசிலே சந்தேகம் இல்லாமெ, நீங்க என் கூடப் பழகினால், பண்ணையார் ஒண்டிப்புலியா பிள்ளை என்ன மாதிரி மனுஷன்கிறது உங்களுக்குப் புரியும். உங்களுக்கும் நன்மை ஏற்படும்...."

"பண்ணையார்வாள், உங்கள் நல்லெண்ணத்துக்காக நன்றி செலுத்துகிறேன். உங்ககூட நான் இப்ப பழகி வருகிற முறையிலிருந்தே உங்களைப் பற்றி ரொம்ப நிறையத் தெரிஞ்சுகொள்ள முடிந்திருக்கு. எனக்கு நன்மை ஏற்படாவிட்டால் போகுது போங்க. நீங்க அதைப்பற்றி வீண் கவலைப்பட வேண்டாமே!"

பண்ணையார் பெருமூச்செறிந்தார். "என்னைப் பகைச்சுக்கிடறதுனாலே உமக்கு என்னய்யா லாபம்?" என்று கேட்டார்.

"வாங்குகிற கூலிக்கு உண்மையாக உழைக்கணும் என்கிற கொள்கை எனக்கு உண்டு. எனது ஆத்மாவை நானே களங்கப் படுத்திக்கொள்ளத் தயாராகவுமில்லே........ எனக்கு என் மனச்சாட்சிதான் முக்கியம்; பிறத்தியான் தயவு பெரிசல்ல. அதனுலே, யாருடைய நட்புக்கும் நான் என்னை அடிமையாக்க வேண்டிய தேவை ஏற்படுவதில்லே. பிறர் மிரட்டல்களுக்கு அஞ்சவேண்டிய அவசியமும் இல்லே."

இன்ஸ்பெக்டரின் கண்டிப்பான பேச்சு பண்ணையாரை வாயடைக்கச் செய்தது. என்ன பேசுவது என்று தெரியாமல், உள்ளுக்குள்ளேயே குமுறிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். சிறிது நேரமானதும் எழுந்து போய் விட்டார்.

நேரம் ஊர்ந்து கொண்டிருந்தது.

"என்ன தேவரே தூங்கி விட்டீரா?" என்று கேட்டார் எ. பி.

"இல்லே எசமான்!"

"நீர் என்ன நெனக்கிரு?"

"எசமான் ரொம்ப காலத்துக்கு முந்தியே இந்தப் பக்கம் வந்திருக்கணும். ஆரம்பத்திலேயே கவனிச்சிருந்தா, ஒண்டிப்புலியா பிள்ளை இவ்வளவு தூரம் வளர்ந்திருக்கமாட்டாரு. பல பேரும் அவரை ரொம்ப பெரிய மனுஷராக ஆக்கிப்பிட்டாங்க. இப்ப பண்ணையார் தன் முழு பலத்தோடும் வேலே செய்வார். நாம ரொம்ப ஜாக்கிரதையாக இருக்கணும்னுதான் தோணுது" என்ருர் தேவர்.

"உம், என்னமோ பார்ப்போம்" என்று சொல்லி வைத்தார் பிள்ளை. "நான் இந்த சேரிலேயே சாய்ந்தபடி கண்ணை மூடுறேன். நீரு அங்கேயே அப்படிப் படுத்துக்

கிடும். விளக்கை அணைக்கவேண்டாம். கொஞ்சமாக இறக்கி, அந்த மூலையிலே வச்சிரும்'' என்றார்.

தேவர் அவ்விதமே செய்தார்.

அன்றிரவு அவர்கள் அஞ்சியபடி விசேஷமாகவோ விபரீதமாகவோ எதுவும் நடந்துவிடவில்லை. இரவு சுகமே கழிந்தது.

தேவர் சுக நித்திரை பயிலவேயில்லை. விழிப்புடன் காவல் காத்தார்.

"பண்ணையார் பெரிய கோப்பன், ஏதாவது பண்ணுவான்'' என்று அவர் மனம் முனகிக்கொண்டிருந்தது.

அதிகாலையில் எல்லைக்குநாத பிள்ளை பிரயாணத்துக்கு ஆயத்தமானார். அவரது வில்வண்டி தயாராக வந்து நின்றது. தேவர் சாமான்களை யெல்லாம் எடுத்து வண்டியில் வைத்துவிட்டார். மற்ற சேவகர்கள் முன்னாலே நடந்து சென்றுவிட்டார்கள்.

இன்ஸ்பெக்டரே சத்திரத்துப் படிகளில் ஒவ்வொன்றாகக் கால் வைத்து இறங்கினார். திடீரென்று 'வே வே.........வேய்!' என்று அலறி அடித்துப் பல்டியடிக்கத் தெரிந்தவர்போல் தள்ளாடினார். கடைசிப் படியிலிருந்து தரையில் கால் பதித்தவர் 'நளுநளு' வென்றிருந்த எதன் மீதோ நறுக்கென்று மிதித்துவிட்டார். அது 'புஸ் புஸ்' என்று சீறவும் அவர் பயந்து கத்தினார்.

ஜாக்கிரதையாக வண்டியில் சாக்கு மெத்தை ஓரத்தில் பதுக்கி வைத்திருந்த வெட்டரிவாளைத் தேவர், எடுத்துக்கொண்டு ஓடி வந்தார். வண்டிக்காரன் பேட்டரி லைட்டை அடித்து ஒளி வீசினான்.

"வே வே, சீக்கிரம்'' என்று கூவியபடி ஒரு குதி குதித்து விலகினார் பிள்ளை.

பெரிய பாம்பு ஒன்று நெளிந்து கொடுத்தது. வளைந்து சுற்றியது. 'புஸ்' என்று சீறிக்கொண்டு, எல்லைக்குருநாதரின் பக்கம் திரும்பியது.

தேவர் தாமதிக்கவில்லை. அரிவாளை ஓங்கி ஒருபோடு போட்டார். பாம்பின் முரட்டு உடலிலே அது எங்கோ பட்டது. தெறித்து விழுந்தது கீழே.

பாம்பு வேதனையுற்றது போல் உடலை நெளித்துக் கொடுத்தது. வேகமாக நகரத் தொடங்கியது.

தேவர் அரிவாளை எடுத்துக்கொண்டு தாவினர். ஓங்கி வீசினர் மறுபடியும். பாம்பு விருட்டென்று ஓடி விட்டது. எனினும் அதனுடைய வால் நுனி துண்டாகி விழுந்தது.

தேவர் வாயினுள் என்னவோ முணுமுணுத்துக் கொண்டே, அந்த வால் நுனியை அரிவாளால் கொத்துக் கொத்தென்று கொத்தி அரிந்து தள்ளினர்.

மேல் பூராவும் விதிர்விதிர்க்க நின்றார் இன்ஸ்பெக்டர். பயம் அவரை வாயடைக்க வைத்தது. பேச நா எழவேயில்லை. அவர் உள்ளம் தெய்வத்தின் பெயர்களை உச்சரித்துக்கொண்டிருந்தது.

எவ்வளவு பெரிய பாம்பு! அது கடித்தால் மனுஷன் என்ன ஆகிறது?—அவர் உள்ளத்தில் பதைப்பு ஏற்பட்டது.

"வண்டியிலே ஏறுங்க எசமான். இன்னமே ஒரு பயமும் ஏற்படாது" என்று தைரியம் கூறினர் தேவர்.

முடுக்கி விடப்பட்ட யந்திரம் போல் செயல் புரிந்தார் பிள்ளை.

வண்டி நகர்ந்தது.

பயம் வண்டிக்காரனையும் பிடித்திருந்தது. ஆகவே, அவன் மாடுகளை 'விரட்டு விரட்டு' என்று விரட்டினான்.

விடிவின் ரேகை சிரித்தது. ஒளி எங்கும் பரவத் தொடங்கியது. கீழ்த்திசைச் சூரியன் தன் கதிர்களால் தடவித் தடவி வழிகண்டு மேலெழ முயன்றவன் போல் வானவீதியிலே கிரணங்களை முன் அனுப்பிக் கொண்டிருந்தான். பிறகு எட்டிப்பார்த்தான்.

வண்டி பண்ணைக்காட்டு எல்லையைக் கடந்ததும் தான், இன்ஸ்பெக்டர் பயம் தெளிந்தவர் போல் பெருமூச்செறிந்தார்,

"சே, எவ்வளவு பெரிய பாம்பு! அதிகாலை மங்கல் வெளிச்சத்திலே அது கிடக்கறதே தெரியலே. பூட்ஸ் காலால் நசுக்குன்னு மிதிக்கவும் தான்... ....?"

தேவர் சிரித்துவிட்டார்.

'என் வே சிரிக்கிரு?'—எல்லையா பிள்ளைக்குக் காரணம் புரியவில்லைதான்.

'பண்ணையார் மார்பில் ஓங்கி மிதிச்ச மாதிரி இருக்கும்!' என்றார் தேவர்.

'என்ன வே உளறுகிரு ?'

தேவர் தெளிவு படுத்தவில்லை. "இந்தப் பாம்பை நீங்க முன்னாலேயே பாத்திருக்கணுமே, எசமான்?" என்று புதிர் தான் போட்டார் அவர்.

"பார்த்திருக்கணுமா? இதையா?"

பிள்ளை தன் தலையைச் சொரிந்தார்.

"பண்ணையாரின் செல்வக் குழந்தை மாதிரி இது. அவர் வீட்டுக் காட்சிசாலைக் கண்ணாடிப் பெட்டிக் குள்ளே ..."

"ஓகோ, அந்தப் பெரிய பாம்புதானு! அது செத்தது என்று பண்ணையாரு சொன்னுரே. எனக்கு அன்னைக்கே சந்தேகம்தான். செத்த மாதிரித் தெரியலியேன்னு கூட கேட்டேன். அவரு மழுப்பிவிட்டாரு........அதே பாம்பு தானு இது! எப்படி வே கண்டுபிடிச்சீரு நீரு?"

'ஒரு வகையிலே அது செத்த பாம்புன்னுதான் சொல்லணும். வாலை வெட்டினேனே ரத்தம் வந்துதா? வாலைத் துண்டு துண்டாகக் கொத்தின போதுகூட ரத்தம் துளிகூடக் காணலியே!" என்ருர் தேவர்.

"அதுனுலேதான் கொத்துனீரா? ஏண்டா இவரு இப்படிச் செய்தாருன்னு......."

"புரியணுமா? இப்ப நீங்க பண்ணையாரைப் பார்த்தால் புரிஞ்சுபோம். ஆனுல், மனுஷன் உங்களை நேரே சந்திக்க விரும்பமாட்டார் என்றே நெனக்கிறேன்" என்ருர் தேவர். மிடுக்காகச் சிரித்தார்.

அவர் சிரிப்பிலும் பேச்சிலும் பொருள் புதைந்து கிடப்பதாகத்தான் தோன்றியது எல்லைக்குநாதருக்கு. விஷயத்தை அறிந்துகொள்ள, வண்டியை உடனேயே திருப்பிப் பண்ணையார் வீட்டுக்கே போகலாமா 'என்று எண்ணிஞர். ஆனுல், உள்ளத்து உணர்வுக் குழப்பம் அறிவின் துடிப்பைவிட வலியதாக இருந்தது. அதனுல் அவர் மௌனமாஞர்.

தேவரும் விளக்கம்தர முன்வரவில்லை.

## தேய்வு

எல்லைக்குநாத பிள்ளை பண்ணைக் காட்டுக்குப் போய்விட்டுத் திரும்பிய மறுநாள்....

அவர் ஏதோ அலுவலில் ஈடுபட்டிருந்த வேளையில் இசக்கித் தேவர் சிரிப்பு முகத்தோடு வந்து சேர்ந்தார்.

"என்னவே தேவரே, சிரிப்பாணி பொங்கி வருதே! என்ன விசேஷம்?" என்று கேட்டு வைத்தார் பிள்ளை.

தேவர் சொன்னார்:

"பண்ணைக் காட்டிலேயிருந்து ஒரு ஆளு வந்தது. அங்கே ஒரு விபத்து நேர்ந்துட்டுதாம். அதிகாலையில் மலையடிவாரத்திலே உலாத்தப்போன பண்ணையாரு, அங்கேயிருந்த குளத்திலே இறங்கும்போது பாறாங்கல்லு மகுடிச்சிட்டுதாம்: காலு வழுக்கவே பண்ணையாரு ஒரு கல்லைப் பிடிக்க, அவர் தின்ன கல்லு புரண்டு உருள, இன்னொரு கல்லு காலு மேலேயே விழ, விரலுக சிதைஞ்சு பாதம் அப்படியே துண்டாயிட்டுதாம். எவ்வளவு கட்டுப் போட்டும், ரத்தம் நிற்காமெ ஆறாக ஓடிக்கிட்டேயிருந்துதாம். அவரு விழுந்த விழுகிலே, மார்பு ஒரு பாறையிலே இடிச்சிட்டுதாம். கூர்கூராக இருந்த பாறை, அரிவாளாலே வெட்டின மாதிரி, காயப்படுத்தி விட்டதாம். பண்ணையாரு நடக்க முடியாம நடந்து சத்திரம் இருக்கிற தெரு மூலைக்கு வந்ததும் மயங்கி விழுந்து கிடந்தாராம். காலையிலே அந்தப் பக்கமாக வந்த ஆட்கள் அவரை வீடு கொண்டுபோய்ச் சேர்த்து, வேண்டிய சிகிச்சைகள் செஞ்சாகளாம். அவர் கண் திறந்து அறிவுத் தெளிவுபெற்ற பிறகுதான் இவ்வளவு விசயத்தையும் சொன்னாராம்....ஹஹ, எல்லாம் கதை போலிருக்கு. இல்லையா எசமான்?"

தேவருக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை! குலுங்கிக் குலுங்கிச் சிரித்தார்.

எல்லைக்குள்ளாத பிள்ளையின் மூளை விஷயத்தைக் கிரகிக்கச் சிரமப்படுவது போல் தோன்றியது. அவர் பார்த்த பார்வையிலிருந்து திரும்புகிற வழியில் 'பண்ணையாரைப் பார்த்தால் விஷயம் விளங்கும்' என்று தேவர் சொன்னது அவர் நினைவில் குதித்தது. பாம்பின் வாலைத் தேவர்

துண்டித்ததற்கும் பண்ணையாரின் கால் போனதற்கும் ஏதோ தொடர்பு இருப்பதாகப்பட்டது. ஆனால் அது எவ்விதமான சம்பந்தம் என்றுதான் புரியவில்லை. 'என்னவோ சொல்வார்களே-தென்ன மரத்திலே தேள்கொட்ட, பனைமரத்தில் நெறி கட்டியதாம் என்று, அந்தக் கணக்கிலே அல்லவா இருக்கிறது இதுவும்!' என்றுதான் அவர் சிந்தனையில் எழுந்தது.

"என்ன தேவரே விஷயம்? உமக்கு அதிகப்படியாச் சில விவரங்கள் தெரியும்னுதான் நினைக்கிறேன். அதை வாய்திறந்துதான் சொல்லுமேன்! பாம்பையும் பண்ணையாரையும் சம்பந்தப்படுத்திப் பேசினீரே, அது ஏன்? பாம்பு அடிபடவும், பண்ணையார் காயம்படவும் நேர்ந்தது எதுனாலே?" என்று விசாரித்தார்.

"எசமான், சில விசயங்களைத் திட்டமாக இது இன்ன மாதிரித் தான்னு எல்லைகட்டி—சர்க்கார் முத்திரை போடுகிற மாதிரி அளவிட முடியாதுன்னு தான் தோணுது. பல காரியங்களை, அவற்றின் காரணங்களை, மனித அறிவு புரிந்து கொள்ளவே முடியவில்லை. புரிந்து கொள்ள முடியாத விஷயங்களைக் கண்டு பிரமித்து, பயந்து, அப்படி அப்படியே ஏற்றுக்கொண்டு, நம்பிக்கையோடு பக்தி பண்ணி வளர்ப்பது ஒரு வகை. புரிந்து கொள்ள முடியவில்லை; அறிவுக்கு எட்டவில்லை; ஆகவே அது இருக்க முடியாது; அப்படி இருந்தாலும், நமக்கு அது தேவையில்லை என்று ஒதுக்கிவிட முயல்வது மற்றொரு வகை. இந்த இரண்டு வகைகளுக்கும் மத்திபமான இன்னொரு பிரிவும் இருக்கத்தானே வேண்டும்? இருக்கிறதா இல்லையா, புரிந்துகொள்ள முடியுமா முடியாதா என்ற துடிப்போடு ஆராய்வது. ஆராய்ந்து ஆராய்ந்து, ஒருவிதப் பயிற்சி பெறுவதனாலே ஒருவகை நம்பிக்கை வளர ஏது உண்டாக்கிக் கொள்வது. 'இருக்கிறது' என்ற நம்பிக்கையோடு, அல்லது 'இல்லை' என்று

முடிவுகட்டி அந்த நம்பிக்கையோடு, காரியம் செய்ய ஈடு படுகிறபோது எவ்வளவோ சாதிக்க முடியும் என்றுதான் எனக்குத் தோணுது. 'இருக்குமோ...... இருக்கும், இருக்கும்!' அப்படி இருக்கவா போகுது?'-இப்படிக் கணத்துக்கு ஒரு மாதிரியாகச் சஞ்சலப் படுகிறபோது, எதுவும் சரியாக நடக்காது. இந்த விதமாக நானே யோசிச்சு யோசிச்சு மூளையைக் குழப்பிக்கொள்றது வழக்கம்.

"மந்திர வித்தைகள், சித்துக்கள் முதலியவற்றை 'இருக்கின்றன; இவை சக்தி உள்ளவை. இவற்றால் எவ்வளவோ சாதனை புரியமுடியும்' என நம்பி, உபாசிக் கிறவங்க அவற்றைப் பழகித் தங்கள் லாபத்துக்கு உப யோகப் படுத்திக் கொள்கிறாங்க. 'இவை எல்லாம் கிடை யாது, இருக்க முடியாது' என்கிறவங்க, இவற்றைப் பற்றி எண்ணாமலே காரியங்களைச் செய்துகொண்டு போகலாம். அவர்களது நம்பிக்கை வலுவாகிப் போகு மானால், மந்திரம், பேய், பிசாசு என்கிற எதுவுமே அவர் களைப் பாதிக்க முடியாது என்றே வைத்துக் கொள்ள லாம். பேச்சுக்குத்தான். என்னைப் பொறுத்த வரை யில், நான் அவர்களைக் கேள்வி மேல் கேள்வி கேட்டுத் திணறடிக்க முடியும். சொல்லுக்கு ஒண்ணு சொல் றேன் —

"ஐயா, நீ வீட்டிலேயே இருக்கிறே. திடீர்னு உன் வீட்டுக் கூரையிலே கல்லு வந்துவிழுது. தீப்பந்தம் விழுது. உன் வீட்டுச் சோத்துப் பானையிலே மண்ணோ ரோமமோ, புழுவோ, அசிங்கமோ வந்து சேர்ந்துவிடுது, இதுக்கு நீ என்ன சொல்லுதே? இதுதான் 'ஏவல்'னு நான் நம்புறேன். உன்னாலே விளக்க முடியாது. மனித அறிவாலே புரிந்துகொள்ள முடியாத—புரியும்படியாக விளக்க முடியாத—ஒரு வித சக்தியின் லீலைகள் இவை. இப்படி எவ்வளவோ உதாரணம் சொல்ல முடியுமே!

"எசமான், நான் இதுமாதிரிப் பேசிப் பல பேரு வாயை அடைத்துவிட முடியும்....நான் தேவையான விசயத்தைச் சொல்லாமெ வளவளன்னு பேசிக்கிட்டே இருக்கேனேயின்னு உங்களுக்குத் தோணலாம். இந்த விசயத்தை விளங்கவைக்க இவ்வளவு தூரம் சொல்லணும்னு நெனச்சேன். அவ்வளவு தான்.

"பண்ணையார் நம்பினார். அல்லது, இம்மாதிரி லீலைகளை மதமாகக் கொண்டிருந்த சிலபேர்களிடம் நம்பிக்கை வச்சார்: பக்தி பண்ணினார். ஜனங்களை மிரட்டி, தான் உயர்ந்துவிட, இதை வெற்றிகரமாகப் பிரயோகிக்கலாம்னு நம்பி எல்லாத்தையும் படிச்சார். நினைச்சபோது நினைத்தவைகளை ஏவி விடக்கூடிய வல்லமையை அவர் திடமான நம்பிக்கையாலும் உபாசனையாலும் பெற்றுக்கொண்டார். செத்ததுக்குள்ளே சீவனைப் புகவிட்டுத் தனக்குச் சாதகமாக இயக்கக்கூடிய சித்தியையும் அவர் பெற்றிருக்கிறார் என்பது ரொம்பப் பேருக்குத் தெரியாது. அதுதான் 'கூடுவிட்டுக் கூடு பாய்கிற வித்தை'. அதெல்லாம் இந்தக் காலத்திலே ஏது வேய்னு சிரிப்பாங்க பல பேரு. ஆனா, அவங்க மனமே, 'இருந்தாலும் இருக்குமோ?' என்று அடித்துக் கொள்ளும்.

"அது எப்படியும் போகுது. ஒண்டிப்புலியா பிள்ளை பல வருஷங்களாகப் பாடுபட்டு இதுமாதிரியான பல கலைகளையும் கற்றுக்கொண்டார். மலையாளத்து மந்திரவாதி ஒருத்தர்தான் அவருக்குக் குரு. பண்ணையாரின் அப்பாவும் தாத்தாவும் இவ்வித விவகாரங்களிலே பெரிய கை தான். இவங்க மூலம் பண்ணையார் என்னென்ன படிச்சு எவ்வளவு தூரம் தேறியிருக்கார்னு யாரும் சொல்ல முடியாது....அவரு பெரிய பாம்பு ஒன்று வளர்த்தார். அது செத்துப் போச்சு. ஆனாலும், உடலுகெட்டுப் போகாமல் காப்பாத்தி வச்சிருக்காரு. அதைக் கண்ணாடிப் பெட்டிக்குள்ளே நீங்க பார்த்திருப்பீங்க. தேவைப் படுகிறபோது,

அதுக்குள்ளே தன் ஜீவனைப் புகவிட்டு, இஷ்டமான காரித்தை முடிச்சிர முடியும் அவராலே. அந்தப் பெரிய பாம்புதான் நேற்றுக் காலையிலே வந்தது. அது வாலை வெட்டினதுனாலே தான் பண்ணையாரின் காலு போச்சு. துண்டு துண்டாகச் சிதைச்சதுனாலேதான், விரல்கள் நசுங்கிச் சிதைபட்டன........"

இசக்கித் தேவர் பேசப் பேச, எல்லைக்குறாத பிள்ளைக்குத் திகைப்பே ஏற்பட்டது. 'பார்ப்பதற்குச் சாதாரணமாகத் தோன்றும் பேர்வழி இவ்வளவு விஷயங்களைக் கற்று வச்சிருக்காரே!' என்ற பிரமிப்பு வளர்ந்தது. சில சந்தேகங்களும் தலை தூக்கின.

"அது சரிதான் தேவரே. பண்ணையாரின் உயிர்ச் சக்தியே பாம்புக்குள் புகுந்திட்டது என்றே வைத்துக் கொள்வோம். அப்ப அவர் உடல் எங்கே கிடக்கும்? உயிர் புகுந்திருக்கிற இந்த உடலைக் காயப்படுத்துவதனாலே, சொந்த உடல் பாதிக்கப்படும்—பாதிக்கப்படத் தான் வேண்டும்—என்று எப்படி நிச்சயிக்க முடியும்?" என்று கேட்டார் அவர்.

"அதுதான் சொன்னேனே, எசமான்! இதுமாதிரி விவகாரங்களில் நம்பிக்கை ஏற்படும் படியாக, அறிவுக்குப் பொருத்தமான, விளக்கங்கள் கொடுப்பது சாத்தியமில்லை தான். இருந்தாலும், இப்படி யிருக்கலாம்னு நினைக்கிறேன். உடலும் உயிரும் ஒன்றுக்கொன்று இணைப்பு பெற்றதுதானே? உடல் பாதிக்கப்படுகிற போது, உள்ளமும் பாதிக்கப்படுது; ஆத்மசக்தி பாதிக்கப்படுது. அதே மாதிரி உயிர்ச்சக்தி நேரடியாகப் பாதிக்கப்பட நேர்ந்தால், உடலும் பாதகம் அடையத்தானே வேண்டும்? வெளிப்படையான செயலினாலே-அதன் வலிமையினாலே—உடல் பாதிக்கப்படுவது. எண்ணங்களின் வலிமையால் உள்ளத்தை, உயிரை, ஆத்மாவைக் களங்கப்படுத்த—கறைபடுத்த—காயப்படுத்த முடியுமா முடியாதா? மந்திரம்

என்பது வஜ்ர சக்தி பெற்ற எண்ணம்தானே?...... இப்படி உயிரைத் தன் உடலைவிட்டு மாற்றிப் பிற கூட்டுக்குள் புக விடுவதற்கு முன்பு, பாதுகாப்பான இடத்திலேதான் உடலைக் கிடத்தி வைப்பது வழக்கம். பண்ணையார் தனது வீட்டு அறைக்குள்ளேயே உடலை விட்டுவைப்பதும் உண்டு. ஊருக்கு வெளியே மறைவான புதரில் நேற்று தன் உடலைப் படுக்க விட்டிருக்கலாம்........''

“உமக்கு இதெல்லாம் எப்படி வே தெரிஞ்சுது?” என்று வியப்பு அதிகரிக்க விசாரித்தார் பிள்ளை.

தேவர் சிறு சிரிப்பு சிரித்தார். ''இந்த ஊரிலே செல்லம் பண்டிதர்னு ஒரு மந்திரவாதி இருந்தார். மந்திர வித்தைகளிலே கைதேர்ந்த கில்லாடி அவரு. அவர் கிட்டேதான் நான் கொஞ்ச நஞ்சம் வித்தை கத்துக்கிட்டேன். செல்லம் பண்டிதருக்கும் பண்ணையார் வீட்டுக்கு வந்து போகும் மலையாளத்து மந்திரவாதிக்கும் சிநேகம். அவர் மூலம்தான் எல்லாம் தெரியவந்தது....''

''ஒண்டிப்புலி பெரிய சூரர்னு தெரியுதே. நீரு அவரை ஏன் வே பகைச்சுக்கிடணும்? இனிமே அவரு சும்மா இருப்பாரா? என் பேரிலே இருந்த கோபம் உம்ம மேலேயும் திரும்பத்தானே செய்யும்?'' என்றார் இன்ஸ்பெக்டர்.

தேவர் சொன்னார்: “நீங்க சொன்னமாதிரி ஒண்டிப் புலியை நொண்டிப் புலியாக்கியாச்சு. அவசியமானால், ஒரேதிரியா அதை மூலையிலே முடக்கிப் போட்டு விடுவது சிரமமா என்ன?... எசமான் மட்டும் முன்னமேயே இந்த ஊருக்கு வந்திருந்தா, நல்லா யிருந்திருக்கும். ஒண்டிப் புலி வாலை ஒட்ட நறுக்கியிருக்கலாம்.''

இன்ஸ்பெக்டர் ஏதோ யோசனையில் ஆழ்ந்துவிட்டவர் போல் காணப்பட்டார். சட்டென்று கேட்டார்:

"தேவரே, ஒரு சந்தேகம். நீரு விசயத்தை மறைக்காமே பதில் சொல்லுவீரா?"

"கேளுங்க, எசமான்!"

"தேவரே, நீரு இல்லாமேப் போனு, ஒண்டிப்புலியா பிள்ளை இதுக்குள்ளே என்னை ஒழிச்சிக்கட்டி இருப்பாரு. அது நிச்சயம். நீர்தான் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் குறுக்கிட்டு என்னைத் தப்ப வைத்தீர்........"

"என் கடமையைத் தானே செய்தேன், எசமான்" என்று மென்று விழுங்கினுர் தேவர்.

"அதைத்தான் குறிப்பிட வாறேன்: நீரு கை நீட்டி வாங்குகிறது சர்க்கார் சம்பளம். என்மீது உமக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய விசுவாசம் அல்லது அன்பு, இது களினுலே மட்டுமே நீர் பண்ணையாரைப் பகைக்கத் துணிந்திருப்பீர்னு எனக்குத் தோணலே. பண்ணையாரை உமது பரம வைரியாக நீர் மதிச்சிருக்கணும்; அவரைச் சரியானபடி பழி வாங்கவேணும் என்ற எண்ணம் உமக்கு இருக்கணும் என்றே எனக்குத் தோணுது. உண்டா இல்லையா, சொல்லும்?"

தேவர் தயங்கி, முழங்கையைச் சொரிந்தவாறே நின்ருர். பிறகு "உம், உங்க கிட்டே சொல்லாமல் என்ன! நீங்களும் தெரிஞ்சிகொள்ள வேண்டியதுதான்" என்று முன்னுரை கூறி ஆரம்பித்தார்—

"எசமான், என் பெண்சாதி பேச்சியம்மை கண்ணுக்கு லெட்சணமா, சிவப்பு நிறமாக இருப்பா...."

உடனேயே எல்லைக்குநாதருக்கு விஷயம் புரியத் தொடங்கியது. லேசாகத் தலையை ஆட்டி வைத்தார்.

"ஒருநாள், அவள் பண்ணையாரு கண்ணிலே பட்டு விட்டாள். அவன் கேலி பேசி, சின்னத்தனமா நடந்து

கொண்டிருப்பான் போலிருக்கு. அவ என்கிட்டே வந்து சொன்னு. ஜாக்கிரதையா இரு, கவனிக்கலாம்னு சொல்லி வச்சேன். ஆனல், அதுக்கு முன்னடி அவனே கவனிச்சுட்டான். அன்னைக்கு அந்தி நேரத்திலே, குளத்துப் பக்கம் போனு பேச்சி. திரும்பி வரவே இல்லே. மறுநாள் சாயங்காலம், பாம்பு கடிச்சி செத்துக் கிடந்தாள்னு, சொல்லி அவளை—அதுதான் சவத்தை—சிலபேரு எடுத்துவந்து போட்டாங்க. அவ காணுமப் போயிட்டா இன்னதுமே, எனக்கு ஒண்டிப்புலி மேலே தான் சந்தேகம் ஏற்பட்டது. திருவிளக்கு மையி போட்டுப் பார்த்தேன். கண்முன்னலே நடப்பதுபோல எல்லாம் தெளிவாத் தெரிஞ்சுட்டுது... பேச்சி பாம்புக் கடியாலே செத்ததுக்கும் பண்ணையான்தான் காரணம். அது எனக்குத் தெரியும். ஆனு நான் அதை எப்படி நிரூபிக்க முடியும்? என் சொல்லே யாரு நம்புவாங்க?.... காலே கையை விளங்காமல் செய்து, அவனே முடக்கிப் போடலாம். அது என்னலே முடியும். ஆனல் என்னை பத்தி அவன் கொஞ்சமாவது உணரணுமின்னு நெனச்சிருந்தேன். ஊரிலே பெரிய பணக்காரன், செல்வாக்கு உள்ளவன் அவனை நான் எப்படி பகைச்சுகிட்டு வாழ முடியும்? அதிலும் எனக்கு எசமான்களாக வந்து சேர்ந்த மேலதிகாரிகள் அவன் சொன்னபடி ஆடித் திரிஞ்சபோது?........... போகட்டும் போகட்டும், உரிய காலம் வராமலா இருக்கும்னு நெனச்சிருந்தேன். தெய்வம் உங்களை இங்கே கொண்டுவந்துசேர்த்துது. வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்குரிய வேளையும் வந்துட்டுதுன்னு எனக்கு நிச்சயமாத் தெரிஞ்சு போச்சு!'' என்ருர் தேவர்.

இன்ஸ்பெக்டர் மௌனமாக இருந்தார். என்ன சொல்வது என்று அவருக்கு விளங்கவில்லை போலும்!

“அநியாயக்காரனுக அத்தனை காலத்துக்குத்தான் செயம் செயமுனு போட்டு அடிக்க முடியும்? அவங்க

ளுக்கும் ஒரு முடிவு காலம் வந்து தீரவேண்டியதுதானே எசமான்?'' என்று பேச்சை வளர்த்தார் தேவர்.

“சரி தேவரே; ஒண்டிப்புலியா பிள்ளையைக் குற்றவாளி என்று நிரூபித்துக் கோர்ட் விசாரணைக்குக் கொண்டுவந்து, சர்க்காரே தண்டனை அளிக்கவேண்டும். அதுக்கு வழி இருக்குதா பாரும், முதலிலே. அதுதான் முக்கியம்'' என்றார் எல்லைக்குநாதர்.

தேவர் சிரித்தார். “ஒண்டிப்புலி பெரிய ஆளு எசமான். எந்த வகையிலும் லேசிலே சிக்கிக் கொள்ளக் கூடிய ஆசாமி யில்லை. எப்படியாவது நாம அவருக்கு பாடம் கற்பிக்கவில்லையோ, ஆபத்துத்தான். நமக்கே சிட்டு கிழிச்சுடுவாரு. அது நிச்சயம் தான்'' என்றார்.

* * * *

இன்ஸ்பெக்டர் எல்லைக்குநாத பிள்ளை, இரண்டு நாட்களுக்குப் பிறகு, இசக்கித் தேவரிடம் கேட்டார்: 'என்னவே தேவரே, பண்ணையார் ஒண்டிப் புலியா பிள்ளையைப் பார்க்கணும்கிற ஆசை உமக்கு இருக்குதா?' என்று.

'போய் பார்த்துவிட்டு வரச்சொன்னா, நான் போகத் தயார்தான்'' என்று சிரித்தபடி சொன்னார் தேவர்.

“நான் எழுதி அனுப்பிய ரிப்போர்ட்டு ஒன்றிலிருந்து சில குற்றங்களைக் குறிப்பிட்டு, இதற்கெல்லாம் ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது என்பதற்குத் தக்க காரணங்களோடு சமாதானம் கூறவும்; இல்லாவிடில் சட்டப்படி நடவடிக்கை எடுக்க வேண்டியதாகும் என்று அறிவிச்சிருக்காங்க. இந்தக் காகிதத்தைப் பண்ணையாரிடம் கொடுத்து, கையெழுத்து வாங்கி வர

ணும். நீரே போறீரா? அல்லது, வேறு யாரையாவது அனுப்பலாமா?''

உற்சாகமாகச் சொன்னார் தேவர்: "என்னையே அனுப்புங்க எசமான்!''

எல்லைக்குநாதர் ஆட்சேபிக்கவில்லை.

*    *    *    *

தேவரைக் கண்டதும் பண்ணையார் வெறுப்பு கக்கும் பார்வை சிந்தினார். அவர் பங்களாவின் வெளியிலேயே ஈஸிச்சேரில் சாய்ந்தபடி இருந்தார். வீட்டுக்குள் மட்டும் இருந்திருப்பின், தேவரைச் சந்திக்க முடியாது என்றே சொல்லியிருப்பார்.

தேவர் கும்பிடு போட்டுவிட்டுக் கேட்டார், "காலிலே என்ன கட்டு ஐயா? பலத்த காயம் போலிருக்குதே?'' என்று.

அவரது குரலிலும் விழிகளிலும் பண்ணையார் என்னத்தைத்தான் கண்டாரோ! அவர் முகம் கறுத்தது. ஒன்றும் பதில் பேசவில்லை. தேவரின் உள்ளத்துச் சிரிப்பு உதட்டிலும் நெளிந்தது.

"இன்ஸ்பெக்டர் எசமான் அனுப்பினாக. இந்தக் காகிதத்தைப் பெற்றுக்கொண்டு, கையெழுத்துப் போட்டு அனுப்புங்க'' என்று கவரையும், துண்டுத் தாளையும் நீட்டினார்.

பண்ணையார் அவசரமாகக் கவரைக் கிழித்து கடிதத்தைப் பிரித்துப் படித்தார். அவர் ஆத்திரம் அதிகமாகியதாகவே தோன்றியது.

"சரி, நீர் போகலாமே!'' என்றார் அலட்சியமாக.

"கையெழுத்து ?"

"ஓ!" என்று மிடுக்காகக் கூறி, தாளில் கிறுக்கி அதை வீசி எறிந்தார் தேவர் நின்ற பக்கமாக.

தேவர் குனிந்து அதை எடுத்துக்கொண்டு விஷமச் சிரிப்போடு அவரை நோக்கினார்; "மார்பு வலி சரியாப் போயிட்டுதா ஐயா?" என்று அக்கறையோடு விசாரித்தார்.

"ஊம்ம்" என்று உறுமினார் ஒண்டிப்புலி. அது கூட வேதனையின் முனகல் என்றே பட்டது.

"எசமான், ங்க பெரிய பாம்பு ஒன்று வளர்ப்பதாக எல்லோரும் சொல்றாகளே. கண்ணாடிப் பெட்டியிலே இருக்கிற பாம்பை நானும் பார்க்கலாமா ?"—தேவரின் எடக்குக் கேள்வி இது.

பண்ணையார் விஷம் கக்குவது போல் பார்த்தார். தட்டித் தட்டிச் சீற்றம் உண்டாக்கியதால் வெகுண்டு நோக்கும் சர்ப்பத்தின் மணிக்கண்கள் போலவே மினிர்ந்தன பண்ணையாரின் விழிகள்.

'போடா கழுதை!' என்று எரிந்து விழுந்தார் அவர்.

'க்ளக்' என்று தனி ரக ஒற்றைச் சிரிப்பை உதிர்த்து விட்டுக் குத்தும் பார்வையை வீசியபடி, வெளியேறினார் இசக்கித் தேவர்.

தேவர் உடனடியாகவே ஊருக்குத் திரும்பிவிடவில்லை. இருட்டுவதற்கு முன்பே பண்ணைக்காட்டு எல்லையைக் கடக்கும் உத்தேசம் அவருக்கு இல்லவே இல்லை. பண்ணையாருக்குத் தெரியும்படியாக அங்குமிங்கும் அலைந்தார். பண்ணையாரின் ஆட்களைக் கண்டு அநாவசியமாகப் பேச்சுக் கொடுத்து பேச்சு வாங்கிக் கொண்டிருந்தார். ஒண்டிப்புலி கூப்பிட்டு விசாரிக்கக்கூடிய நபர்கள் என்று

தோன்றியவர்களிடம், அவரைப்பற்றி மோசமாகவே பேசினர்.

"பண்ணையாரு என்ன, கேள்வி முறை கிடையாதுன்னு நினைச்சுப் போட்டாரு போலிருக்கு. பொம்பிளைகளைச் சிறைப்படுத்தி மானபங்கப்படுத்தறது, கொலை பண்றது—இப்படி எல்லாம் செய்துகிட்டிருக்கிறாரே? தான் செய்கிற அட்டூழியம் எதுவும் வெளியே தெரியாமல் போய்விடும் என்கிற தெம்பிலே வாழ்கிறாக்கும்! ஒருநாள் இல்லாட்டா ஒருநாள் பலனை அனுபவித்துத்தானே ஆகணும்? வல்லவனுக்கு வல்லவன் வையகத்திலே உண்டுன்னு சும்மாவா சொல்லியிருக்காங்க?...."

இவ்விதம் வினையை வளர்த்தார் தேவர். 'புத்தி கெட்டதனமாகப் புலம்புகிறானே' என்றுதான் மற்றவர்களுக்குத் தோன்றியது. ஆனால் அவர் ஒரு திட்டத்தோடுதான் வேலை செய்தார். அது பலிக்கும் என்ற நம்பிக்கையோடு திரும்பினர்.

அப்போது அந்திக் கருக்கல் நேரம். ஒளி மங்கி, எங்கும் இருள் கவிந்து கொண்டிருந்தது. இசக்கித் தேவர் பண்ணைக்காட்டு எல்லையைக் கடந்துகொண்டிருந்தார்.

செடிகள் புதராக அடர்ந்த வெளியை ஒட்டி ஓர் ஓடை. பெரும்பாலான நாட்களில் அதில் தண்ணீரே இராது. அதைத் தாண்டும்போது, தற்செயலாகத் திரும்பிப் பார்த்தார் தேவர். குறும்பாகச் சிரித்தார். கையில் முன் ஜாக்கிரதையாக வைத்திருந்த வெட்டரிவாளை வீசினர் குறிபார்த்து.

அரிவாள், அவரை நோக்கிவந்த பெரிய பாம்பின் தலையிலே ஆழமாகப் பதிந்தது. ஒரு துள்ளுத் துள்ளியது பாம்பு.... அதற்கு முந்திக்கொண்டு வெகு வேகமாகத் தடியைச் சுழற்றி அடித்தார். ஓங்கி ஓங்கி அடித்தார் தேவர். மந்திர உச்சாடனம் செய்தவாறே அடித்தார்.

பாம்பு அசைவற்றுக் கிடந்தது. இடுப்பிலிருந்த சூரிக் கத்தியை எடுத்து, தேவர் பாம்பின் மேல் குத்தினர். "என் பேர்சி அம்மையைக் கொன்றதுக்காக உன்னை நான் பழி வாங்கியாச்சு. நீ தொலே, நாசமாய்ப் போ!" என்று கூறிக் கத்தியை இன்னும் ஆழமாகச் சொருகினர்.

ஒரு துள்ளல். ஒரு துடிப்பு. பாம்பு செத்தே போயிற்று.

வெற்றிச் சிரிப்பு சிரித்தார் தேவர். அருகே தென் பட்ட பள்ளம் ஒன்றிலே பாம்பைத் தூக்கி எறிந்து, கல், மண்கட்டிகள் முதலியவற்றை எடுத்து வீசி நிரப்பி, நிரந் தரமான சமாதி அமைத்தார். மன நிம்மதியோடு நடந் தார்.

அந்த முன்னிருட்டு வேளையிலே—பண்ணையார் ஒண்டிப்புலியா பிள்ளையின் தனி அறையில் ஒரு சப்தம் கேட்டது. வேதனை யொலி போல் பிறந்து நீண்டு ஒடுங் கியது 'பொத்தென்று' ஒரு சத்தமும் வந்தது. பிறகு ஒரே அமைதி.

கணக்குப் பிள்ளையும், வேலைக்காரர்களும் எதுவும் புரியாமல் அங்குமிங்கும் ஓடினர். கணக்கர் கதவைத் தட்டினர்.

கதவு உள்ளே தாழிடப்பட்டிருந்தது. திறக்க முடிய வில்லை. எல்லோரும் கூடிப் பேசி, கதவை உடைத்துத் திறந்தனர்.

விளக்கொளி அறையில் படர்ந்தது. அனைத்தையும் பளிச்சென எடுத்துக் காட்டியது.

முதலில் நுழைந்தவர் பயந்து கத்தினர். உள்ளே எட்டிப் பார்த்த பலரும் பயந்து அலறினர்.

ஒண்டிப்புலியா பிள்ளை கட்டிலிலிருந்து உருண்டு கீழே விழுந்து கிடந்தார். அவர் மார்பிலும் வாயிலும் ரத்தம் பொங்கிப் பிரவகித்ததுபோல் ஒரே சிவப்பு மயம் ...

துணிந்து அவர் அருகில் சென்று கவனித்தார்கள் சிலர். பண்ணையார் இறந்து கிடப்பதாக உணர்ந்தார்கள்.

அவரது கண்கள் பயமெழுப்பும் தன்மையிலே உறுத்து நோக்கி நின்றன. அவர் மூஞ்சி கோரமாய், விகாரமாய், அச்சமும் அருவருப்பும் தருவதாக இருந்தது.

எல்லோரும் வெளியே வந்துவிட்டனர்.

'பண்ணையாரு தன்னையே சாகடிச்சுக்கிட்டாருன்னு தெரியுது. என்ன காரணமோ, ஏதோ! அவர் மனசை யாரு தான் எந்தக் காலத்திலே தான் புரிஞ்சு கொள்ள முடிந்தது?' என்று பேசிக்கொண்டார்கள் அவர்கள்.

எல்லைக்குநாத பிள்ளைக்கு மன அமைதியே இல்லை.

'தேவர் இன்னும் வரக்காணோமே. காரணம் புரியலியே!' என்று நெஞ்சு பதைத்தது அவருக்கு. நேரம் ஆக ஆக அவருக்கு வேலை எதுவுமே ஓடவில்லை.

இரவு பத்துமணி சுமாருக்கு 'எசமான்!' என்று கூப்பிடும் குரல் காதில் விழுந்ததும் தான் இன்ஸ்பெக்டர் நிம்மதியாக மூச்சுவிட்டார். வெளியே வந்து தேவரைப் பார்த்து மகிழ்வடைந்தார்.

'என்ன தேவரே, ஏன் இவ்வளவு நேரம்? நீரு வர லேன்னதும் என்ன நடந்ததோ ஏதோன்னு என் மனசு சங்கடப்பட்டுக் கொண்டே இருந்தது. ஏன்வே, என்ன நடந்தது?' என்று பரபரப்புடன் கேட்டார்.

'எல்லாம் முடிஞ்சு போச்சு, எசமான்!' எனக் கூறி விட்டு, வெற்றி மிடுக்கோடு சிரித்தார் தேவர். பிறகு விரிவாகவே விஷயத்தை விளக்கினர். முழுவதையும் கேட்டு முடித்ததும் இன்ஸ்பெக்டர், 'நீர் செய்ததும் சரிதான்!' என்று ஆமோதித்தார்.

இருந்தாலும், அயோக்கியத்தனங்கள் செய்து ஆட்டகாசமாய் வாழ்ந்த ஒண்டிப்புலியைச் சட்டரீதியாக மாட்டிவைத்துச் சரியான பாடம் கற்பிக்க முடியாமல் போயிற்றே என்ற வருத்தம் தான் அவருக்கு!



# தெளிவு

அவன் ஒரு கைதி. அவன் பெயரைப் பற்றி மற்றவர்களுக்குக் கவலை கிடையாது. அவனுக்கே அவன் பெயர் மறந்து போனாலும் போயிருக்கும்.

அவன் மீது எத்தனையோ குற்றச் சாட்டுகள். அவனுக்குக் கடுங்காவல் தண்டனை விதித்தது சட்டம். கம்பிகளின் பின்னே, இருட்டறையினுள் தள்ளப்பட்ட அவன் இன்னும் பல கைதிகளைப் போலவே சுரங்க வேலை செய்ய நியமிக்கப் பெற்றான்.

தங்கம் விளையும் பிரதேசத்தில், தங்கச் சுரங்கத்தை அடுத்திருந்தது அந்தச் சிறை. பூமியின் இருண்ட குடலினுள் புகுந்து, தங்கக் கனிகளைப் பெயர்த்துப் பொன் திரட்டும் பணிக்குப் பல கைதிகளைத் தகுந்த கண்காணிப்புடன் நியமித்திருந்தார்கள்.

பூமியின் இருண்ட வயிறு போன்ற சுரங்கத்தினுள் அவனும் போனான். அவன் ஒரு கைதி. அவனுக்கு பெயருக்குப் பதில் ஒரு எண் இருந்தது. 'அறுபத்தஞ்சு'— அந்தச் சூழ்நிலையில் அதுதான் அவன் பெயர்.

எங்கோ கொண்டு வந்து நிறுத்தப்பட்ட குழந்தையைப் போல் விழித்தான் அவன். வெளியுலக வெளிச்

சத்திலிருந்து இருளின் ஊற்றான பாதாளத்தில் புகுந்ததும் குருடாகிப் போனதுபோல் தோன்றிய கண்கள் மெது மெதுவாக இருளில் ஒளி காணப் பழகின. சூட்டால் ஆவி கக்கி, பூமிக்கடியில் உலவும் வாயுக்களுக்குச் சூடேற்றி வெடிக்கவோ, தீயுண்டாக்கவோ துணை புரியச் செயலற்ற கனிமுறை விளக்குகள் சுரங்கத் தொழிலாளிகளுக்குச் சிறிது ஒளி காட்ட முயன்று கொண்டிருந்தன. கண்களை மூடி மூடித் திறந்து, கண்களுக்கு இருள் பழகிப் போய் மங்கல் ஒளியின் உதவியால் சூழ்நிலையை ஆராய முயன்று கொண்டிருந்தான் அவன்.

அவன் செய்ய வேண்டிய தொழில் என்ன? எதை எப்படி யெப்படிச் செய்ய வேண்டும் என்றெல்லாம் போதிக்கப்பட்டிருந்தது. அவன் உடலில் பலமிருந்தது. எந்த வேலையையும் அவனால் செய்ய முடியும். பாறைகளைப் பெயர்த்துத் தங்கம் சேர்ப்பது கஷ்டமான காரியமல்ல. அவன் அவ்விதமே நினைத்தான்.

தங்கம் விளையும் இடத்திலேயே சென்று, தங்கத்தை வெட்டிச் சேர்க்கலாம் என்றவுடன் அவனுக்கு அதிக உற்சாகம் ஏற்பட்டிருந்தது. தனது கை வழியாகத் தங்கம் 'தண்ணீர் பட்ட பாடு பட்டு' அதிகம் புரளும். பளபளப்பு மங்காத புதிய நாணயத்தைக் கையில் வைத்து, திருப்பிப் பார்த்து மகிழ்ந்து போகிற சிறுவர்கள் மாதிரி, அசல் தங்கத்தை வைத்துக் கண்டு களிக்கலாம். அவனுக்கு ஆசை அதிகரித்தது.

தங்கம் சுரண்டப்பட்ட வெற்றிடங்களாகி விட்ட பகுதிகளைக் கடந்து, சுவர்கள் போல் பாறைகள் நின்ற பிராந்தியங்களையும் தாண்டி, கவிந்து சூழ்ந்த பாறைகளின் இடையிலே புகுந்தான் அவன். இன்னின்னார் இந்த இந்தப் பகுதிகளில் வேலை செய்ய வேண்டும் என்று பிரித்து நிறுத்தப்பட்டனர்.

தங்க ரேகைகள் ஆறுகள் போலவும், கிளைகள் போலவும் பாறைகளில் ஓடிக்கிடப்பதை அவன் உணர முடிந்தது. ஆழ்ந்த இருளிலே சிறு பளபள ஒளி மின் வெட்ட அலைபுரளும் கருங் கடலைப் போல, பொன் ஒளி விளக்கின் சுடர் பட்டுப் பளிச்சிட்டுத் திகழ விரிந்து நின்றன நெடும் பாறைகள். தொழிலாளிகள் முந்திய தினங்களில் வெட்டிக் கொத்திப் பெயர்த்த சுவடுகள் நன்கு தெரிந்தன. தரையில் கட்டிகளும் தூள்களும் சிதறிக் கிடந்தன.

அவனும் தனது கையின் உளியால் பாறைகளைக் கொத்தினான். பாறைகளைத் தாக்கி, தங்கம் பறிக்க அமைந்த தனி ஆயுதத்தினால் பலமாகத் தாக்கினான். தனது எதிரியை வேரிலேயே கிள்ளி வீழ்த்த எறிகிற தாக்குதல்களே தனது கைவீச்சு ஒவ்வொன்றும் எனக் கருதினான். அவன் ஆவேசமாக அலுவலில் ஈடுபட்டான்.

பூமிக் குடலின் இருண்ட ஆழத்திலே, அமைதியும் அந்தகாரமும் நிறைந்த அடித்தலத்தில் 'டொக்' 'டொக்' என்று பாறைகளில் மோதிய இரும்புக் கருவிகள் ஒலி எழுப்பின. கட்டிகள் விழும் ஓசை எழும். பொடிகள் சரியும் சத்தமும், துண்டு துணுக்குகள் சிதறும் ஒலியும் கலக்கும். மனிதர்கள் யந்திரங்கள்போல் உழைத்தாலும், அவர்களது உள்ளமும் எண்ணும் திறனும் ஒடுங்கியா கிடக்கும்?

அவன்—அறுபத்து ஐந்தாம் நம்பர் கைதி—உழைத்துக் கொண்டிருந்தான். அவன் மனத்திரையில் அவனது வாழ்வுச் சரிதையின் சாயைகள் தொடர்பிலாப் புகை உருவங்களாய்த் தோன்றி மறையும்.

அவன் பூமியின் அடியில், இருள் நிலத்திலே, பொன் கொத்தி எடுக்க வேண்டிய நிலைக்கு வந்தது ஆதியில் அவனைப் பற்றிய பொன்னாசையினால் தான். பொன்னாசை அவனைத் திருடனாக்கியது. திருட்டு அவனைக் கைதியாக

மாற்றியது. கைதி நாளடைவிலே சுரங்கத் தொழிலாளியாக நேர்ந்தது.

* * * *

அவனுக்கு நன்றாக நினைவிருந்தது, அவனுடைய முதல் திருட்டு. தெருவில் நடந்து கொண்டிருந்தான் அவன். ஒரு வீட்டு நடையில் குழந்தை ஒன்றிருந்தது. சின்னஞ் சிறு குழந்தை. அதன் அழகு அவனைக் கவரவில்லை. அதன் கழுத்தில் கிடந்த தங்கச் சங்கிலி அவனை வசீகரித்தது. அவன் அதன் முகத்தைப் பார்த்தான். களங்கம் என்பது என்ன என்றறியா அக்குழந்தை, செவ்விய அந்தி வானிலே தொத்திக் கிடக்கும் இளம்பிறை போன்ற சிரிப்பை நெளிய விட்டது முகத்தில். தான் கண்ட வேடிக்கை எதையோ அவனிடம் தன் சங்கேத பாஷையில் அறிவிக்க முயன்றது. அவன் அங்குமிங்கும் பார்த்தான். மிரள மிரள விழித்தான். குழந்தை பயந்து அழக் கூடாதே என்று சிரித்தான். கலவரத்தைத் திரைபோட முயன்ற வறட்டுச் சிரிப்பு. அதனருகில் போனான். அது அதிகம் சிரித்தது. எப்படியோ பராக்குக் காட்டி நகையை அபேஸ் செய்து விட்டான். அப்புறம் குழந்தை அழுததோ அல்லது அம்மா, அம்மா என்றுதான் கத்தியதோ! அவனுக்கு நினைவில்லை. குற்றம் செய்து துடித்த நெஞ்சுடன், தப்ப வேண்டும் என்ற துடிப்புடன் வேகமாக நடந்து, சந்து பொந்துகள் வழியெல்லாம் திரிந்து, மறைந்தான்.

இப்போது அவனுக்கு மாசு மருவற்ற குழந்தை முகம்—வைகறைப் போதிலே முழுதலர்ந்த இனிய புஷ்பம் போன்ற அழகு வதனம்—பனிப்படலமாக நினைவில் எழுந்தது.

அதை மறக்கத் தலையை ஆட்டிக்கொண்டான் 65-ம் நம்பர் கைதி. அவன் முகத்தில் வேர்வை முத்துக்கள்

துளிர்த்தன. அவன் பலமாக, வேகமாக, விடாமல் தொடர்பாக, ஒரே எண்ணமாய் பாறையைக் கொத்துவதில் முனைந்தான். அவனது கை நரம்புகள் புடைத்தன. புஜங்களின் தசைக் கூட்டங்கள் விம்மின. அவன் தன்னை, தன் நினைவுகளை, மறந்துவிடத் திவிரமான உழைப்பில் ஆழ்ந்தான்.

ஒருநாள் போல் மறுநாள். நேற்று போல இன்று.... இன்று போல் நாளை. உழைப்பு—ஓய்வு—உழைப்பு—உறக்கம். பகல்கூட அரை இரவு போல்தான் தோன்றியது பூமிக்கடியிலே.

ஆனாலும் அவன் இறந்த காலத்தை மறந்துவிட இயலவில்லை.

ஒரு சின்னப் பெண்ணின் கை வளைகளைத் திருடியிருக்கிறான் அவன். அது கதற ஆரம்பித்ததும், பூப் போன்ற அதன் கன்னங்கள் கொதி எண்ணெயில் போடப்பட்ட பூரிகள் போல் சிவந்து உப்பி விடும்படியாகப் பேயறை அறைந்து விட்டு ஓடியிருக்கிறான்.

தனது தாய் கழற்றி வைத்த தங்கச் சரட்டை 'அமுக்கிச் சென்று' பணமாக்கி யிருக்கிறான். தனது மனைவியின்—ஆமாம், அவனுக்குக்கூட கலியாணம் ஆகியிருந்தது—நகைகளைக் கழற்றி, விற்றுக் குஷாலாகச் செலவழித்திருக்கிறான். ஒரு சமயம் ஓர் இரவைக் கழித்த தாசி ஒருத்தியின் வீட்டில் கைப்பெட்டியிலிருந்த நகைகளைத் திருடினவன்தான் அவன்.

அப்போதெல்லாம் தங்கம் அவனுக்கு மிக உயர்ந்தது. இன்பங்களை விலைக்கு வாங்க உபயோகமாகிற பொருள். பெண்களை மகிழ்விக்க உதவும் மாயச் சரக்கு. நாகரீக ஆடம்பரங்களுக்குத் துணை நிற்கும் ஜம்பச் சாமான். அவன் அதைக் கடவுளாகக் கும்பிட்டான். உலகிலே தன்னை உய்வித்து வாழ வைக்கக்கூடிய

மாமருந்து அதுதான் என்று நம்பினான். அதை எப்படியும் பெறுவதுதான் அவனது வாழ்க்கை லட்சியம். அதற்காகவே வாழ்ந்தான். அவன் அதனால் அடிக்கடி சிறை செல்லவும் நேர்ந்தது. விடுபட்டு வந்ததும் அவன் வாழ வேண்டியிருந்தது. அதற்காக மறுபடியும் திருடுவான். அவன் வாழ்க்கையிலேயே பொன் அவனைப் பிராசாகப் பற்றி வந்திருக்கிறது.

* * * *

தங்க ரேகைகள், சிவந்த மேனியிலே பளிச்செனப் புலனாகும்படி ஓடுகிற நீலநரம்புகள் போல, ஒளியுடன் தெரிந்து மினிரும் பாறைகளைக் கொத்திப் பொன்வெட்டும் 65-ம் நம்பர் கைதி பெருமூச்சு விடுவான் அடிக்கடி. அவன் வாழ்க்கைச் சம்பவங்கள் அவனை எண்ண உருவில் வதைத்தன. அவன் பார்வை சுழலும்.

தங்கம் மண்ணாங்கட்டிகள்போல் மதிப்பற்றுக் கிடந்தது அங்கே. புழுதியாகப் படிந்து ஒவ்வொருவர் காலிலும் மிதிபட்டது. தூசியாகப் பறந்து எங்கும் ஒட்டிக் கொண்டிருந்தது. அதற்கு உயர்வு இல்லை. மதிப்பு இல்லை. தனித்துவ மில்லை. சிறப்பு சிறிதேனுமில்லை. உழைப்பவர்கள் அதைப் பாதுகாக்கவில்லை. அதன் காந்த சக்தியால் கவருண்டு வாய் பிளக்கவில்லை. அவர்களுக்கு அதுவும் சாதாரணமான இயற்கைப் பொருளாகவே தோன்றியது. அவர்கள் ஓய்வின்றி உழைத்தார்கள். அவர்களது இரும்புக் கருவிகள் பாறைகளில் மோதி எழுப்பிய சிற்றொலிகள்தான் 'டொக்கு, டொக்கு' என்று சிதறி எதிரொலிக்கும். அவர்கள் பேசுவதில்லை. கருமமே கண்ணாகிவிடும் இயந்திரங்கள் போல் உழைத்தார்கள். அவர்களுக்கு உழைப்பு ஒரு தண்டனை. தண்டனைதான் அவர்களுக்கு வாழ்வு. அவர்களில் ஒருவன்தான் அவனும்—அந்த 65-ம் நம்பர் கைதி.

ஒரு நாளைப்போல் ஒரு நாள்! என்றும் ஒரே நியதி. என்றும் ஒரே இயந்திர இயக்கம்.

அவன் மனதிலே மாறுதல் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. அவன் உள்ளத்தில் ஒரு தெளிவு மலர்ந்தது. அவன் எண்ணத்திலே ஒரு புதுமை புஷ்பிக்கத் தொடங்கியது.

தங்கம் வெறும் மண்தான். மண்ணின் ஆழத்தில் இருட்குடலில், பாறைகளின் அழுத்தத்திலே பிறக்கும் பொருளான இது புழுதியாகச் சிதைவுறுகிறது இங்கே. அதற்கு மதிப்பு கொடுப்பது மனிதன்தான். பின் அதுவே மனிதனை மயக்கி, ஆட்டி வைக்கும் மோகினி யாகி விடுகிறது.

இவன் உதறமுடியாத அந்த மோகினியின் வலையில் சிக்குண்டு எத்தனை பாபங்கள் செய்திருக்கிறான்! நிறைய நகைகள் அணிந்திருந்த சிறுமிக்கு மிட்டாய் கொடுத்து, ஏய்ப்புக் காட்டி அழைத்துச் சென்று நகைகளைத் திருடிப் பிறகு, சிறுமியின் கழுத்தை நெறித்துக் கொன்று உடலை பாழும் கிணற்றில் வீசி எறிந்ததை எண்ணவும் அவன் இதயம் வேதனையுற்றது. எத்தனை வீடுகளில் அவன் கன்னக்கோல் வைத்திருக்கிறான்! எத்தனை பெண்களின் காதுகளை அறுத்து அணிகளைப் பிடுங்கியிருக்கிறான்!

அவனை வெறியனாக்கிய தங்கம் பூமியினடியில் மண்ணாய், பொடியாய்க் காலில் மிதிபட்டு அலட்சியப்படுத்தப் படுவதை உணர உணர அவனுக்கு புத்தி குழம்பியது. இந்த அற்ப உலோகத்திற்காக இவன் செய்யாத பாபங்கள்—இழைக்காத அநீதிகள்—உண்டா? தன்னைக் குருடனாய், மந்த மதியினனாய், மனிதம் இழந்த வெறியனாய், வெறி மிகுந்த மிருகமாய் மாற்றி வைத்தது அது தானே! அதனால் அவன் கொலை கூட....

அந்தக் கோர நினைவு! பெரும் பணக்காரன் ஒருவன் வீட்டில் புகுந்தான் அவன். பணக்காரன் இல்லை. அவன் மனைவி மட்டுமிருந்தாள். நடு நிசிதான். அரவம் கேட்டு விழித்துக் கொண்டாள். கதற முயன்றாள். அவளை பயமுறுத்தி நகைகளைப் பிடுங்கிக் கொண்டான். பணம், நகைகள் எல்லாம் பத்திரப்படுத்தப்பட்ட பெட்டியின்சாவியைக் கேட்டான். அவள் தெரியாது என்றாள். தன்னிடம் இல்லை என்றாள். ஓவெனக் கூச்சலிடத் தொடங்கினாள். வெகுண்டு வெறி கொண்டு தன்னை மறந்துவிட்ட அவன் கையிலிருந்த அரிவாளால் அவளைக் கொன்றான். ஆனால் அவன் தப்பி ஓட முடியவில்லை. அகப்பட்டுக்கொண்டான்.

* * * *

ஆயுள் தண்டனை பெற்ற அறுபத்தைந்தாம் நம்பர் கைதிக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. அவனுக்கு உழைப்பில் ஆரம்பத்திலிருந்த உற்சாகமில்லை. அவன் உள்ளம் குடைந்தது. இதயத்தில் வேதனை அரித்துக்கொண்டே இருந்தது. மண்டையில் ஏதோ கொதித்துக் கொந்தளிப்பது போலிருந்தது. அந்தச் சூழ்நிலை அவனைக் கொல்லாமல் கொன்று வந்தது. இனியும் தாங்க முடியாது என்ற நெருக்கடி பிறந்துவிட்டது.

அவன் ஜெயிலதிகாரியின் காலிலே விழுந்தான். கண்ணீர் வடித்துக் கெஞ்சினான்.

"என்னால் முடியாது. இனியும் என்னால் அங்கு வேலை செய்ய முடியாது. வேறு எங்காவது எவ்வேலையாவது செய்ய என்னை அனுப்புங்கள். கல் உடைக்கவோ, செக்கு இழுக்கவோ—எந்தக் கடினமான வேலையானாலும் சரி. ஆனால் தங்கச் சுரங்க வேலை வேண்டாம்" என்று அழுது புலம்பினான்.

அதிகாரிக்கு விளங்கவில்லை. விசாரித்து, கேள்வி மேல் கேள்விகள் போட்டு, ஒரு மாதிரியாக அவன் மனக் கோளாறைப் புரிந்துகொண்டார் அவர்.

அவன் வேறு பணிக்கு மாற்றப்பட்டான். அவனது மனக் குழப்பமும் கொதிப்பும் ஒடுங்கின. அவன் உள்ளத்தில் தெளிவு பிறந்தது. தனது வாழ்வைப் பாழாக்கிய மாயப் பொருளின் உண்மைத் தன்மையை உணர்ந்துகொண்டதனால் அவன் உள்ளத்தில் அமைதி பூத்தது. கண்களில் ஒரு ஒளி தெறித்தது.

தனது பாபங்களை, தண்டனை விதித்த கடமைகளை ஒழுங்காகச் செய்து நிவர்த்திப்பதில் முழுமனதுடன் உழைத்தான் அவன்.

அவன் ஒரு கைதி. அவன் எண் அறுபத்தைந்து.



# நம்பிக்கை

ரொம்ப நாட்களாக ஒரே இடத்தில் கிடந்த பெரிய கல் ஒன்றை அசைத்து நகர்த்தினான் ஒரு மனிதன்.

அவன் ஆச்சரியமடைந்தான்.

மண்ணோடு அழுந்தப் பதிந்து கிடந்த கல்லின் அடியிலே, அங்கு வதிந்த இருளிலே, வெட்பமும் தட்பமும் நிறைந்து நின்ற அச்சிறு இடத்திலே கூடச் சில பூச்சிகள் பிறந்து வாழ்ந்தன. திடீரெனப் பிரவகித்த வெளிச்சத்தைக் கண்டு அவை திணறின. பழக்கமான சூழ்நிலை அகற்றப்பட்டு விட்டதால் அவைகளுக்கு ஒரே குழப்பம். அப்படியும் இப்படியும் அலைந்து சுழன்றன.

அவன் கவனத்தைக் கவர்ந்த மற்றொரு பொருளும் அங்கிருந்தது.

ஒரு புல், மஞ்சள் என்றோ வெள்ளை யென்றோ சொல்ல முடியாமல் ஒருவிதமாக வெளிறிப் போய்த் தரையோடு தரையாகப் பதிந்து கிடந்தது புல்லின் கீற்று. புதிதாகத் தான் முளைத்திருக்க வேண்டும்.

போஷாக்கும் சீராட்டும் தாலாட்டும் அதிகமிருந்தும் கூட நன்கு வளராமல் வெளுத்துப் போயிருக்கும் பணக்கார வீட்டுச் சோனிக் குழந்தையை அந்தப் புல் அவனது நினைவுக்கு இழுத்து வந்தது.

அந்த மனிதன் தனது அலுவல்களைக் கவனிக்கப் போய்விட்டான்.

மூன்று நான்கு தினங்களுக்குப் பிறகு அவன் அந்த இடத்திற்கு வந்து கவனித்த போது, மீண்டும் ஆச்சரியமடைந்தான்.

அந்தப் புல் அங்கேயே நின்றது. ஆனால் ஒடுங்கிக் கிடக்கவில்லை. குளுகுளுவென நிமிர்ந்து நின்றது. அதன் வெளிறல் மறைந்து பசுமை பற்றி யிருந்தது. சூரிய வெளிச்சமும் ஆகாயமும் செய்த மாயாஜாலம் அது என்று எண்ணினான் அவன்.

அந்த அற்புதம் தினந்தினமும் நவநவமாய்த் திகழ்ந்து கொண்டிருந்தது. உருவி ஓங்கிய வாள் முனைகள் போல் கூர் கூரான புல்லிதழ்கள் கிளைத்தன. வளர்ந்தன. நீண்டு பரந்து வியாபித்தன.

உயிர் வளர்ச்சியைக் கவனித்தான் அவன். அதிசயித்தான்.

ஒருநாள் அவ் வழியே அசைந்த கன்றுக்குட்டி ஒன்று அந்தப் புல்லைக் கண்டது. பல்லால் நறுக்கென்று கடித்து, உற்சாகத்தோடு தலையை ஆட்டி ஆட்டித் தின்றது. போயிற்று— கடல் மணலிலே குழந்தைகள் ஆசையோடு கட்டுகிற சிற்றிலைச் சிதைத்து விட்டுச் சிரித்துப் புரண்டு ஓடுகிற அலையைப் போல; வாழ்க்கை வெளியிலே மனிதர்கள் கட்டுகிற ஆசைக்கோட்டைகள் அழகாக உருவாகி வருகையிலே அவற்றைச் சிதைத்து விட்டுத் தன் வழியே செல்லும் காலத்தைப் போல!

சில நாட்களுக்குப் பிறகு அந்த மனிதன் அதே இடத்தைக் கவனித்த போது மறுபடியும் அதிசயிக்க நேர்ந்தது.

கடிபட்ட புல் கருகிப் பட்டு மண்ணாகி விடவில்லை. புதிய புதிய குருத்துக்கள் தலைதூக்கி நின்றன; கவியுள்ளத்தின் அழகிய கருத்துகள் போல. குழந்தையின் பிஞ்சு விரல்களின் மென்மையும் ஜீவத் துடிப்பும் அவற்றிலே இருப்பதை உணர்ந்தான் அவன். தடவித் தடவி அவ் வின்பத்தை ரசித்த அவன் கைவிரல்கள் புல்லிதழ்களை

ஒவ்வொன்றாகக் கிள்ளி எறிந்தன. விரல்களின் விளையாட்டு அது. வேண்டுமென்று செய்ததல்ல.

அதற்காக வருந்தினான் அவன்.

திட்டமிட்டுச் செயலாற்றிய முயற்சிகள் சந்தர்ப்பச் சதிகளினாலே சிதைந்து சிரழிந்து கிடப்பதுபோல் அலங்கோலமாகக் கிடந்த பசிய புல் இதழ்களைக் கண்டு அவன் வருந்தினான். போனான்.

பிறகு ஒரு நாள் வந்த போதும், அவன் அதிசயிக்க நேர்ந்தது.

யாரோ சிறுவர்கள் சில செங்கல்களை வரிசையாக வைத்தும், மேலே மேலே அடுக்கியும், விளையாடிக் களைத்துப்போய் அப்படி அப்படியே போட்டுச் சென்றிருந்தார்கள். அந்தப் புல்லின் மேலும் சில செங்கற்கள் கிடந்தன. ஆயினும் இரண்டு செங்கற்களுக்கு நடுவேயுள்ள இடைவெளி வழியாக புல் இதழ் நீட்டி வளர முயன்றது. அதன் நெடிய இதழ், கிடைக்கிற சிறு வழியினூடும் புகுந்து பாய்கிற ஒளிக் கதிர் மாதிரி, கூர்மையாய் வளர்ந்திருந்தது.

அவன் அதிசயித்தான். சிருஷ்டி யினங்களிலே உயிரின் உள்ளுறையாய்க் கலந்திருக்கும் உயிராசை— வாழ்வின் பற்றுதல்—அவனுக்கு வியப்பளித்தது. தடைகள் பல நேரினும் சோர்வுறாது திரும்பத் திரும்ப தலை தூக்க முயலும் புல்லின் உயிர்ப்பற்று — வாழ்வதில் கொண்ட நம்பிக்கை — மனிதனுக்கும் இருந்தால்? ஒவ்வொரு மனிதனுக்கும் இருந்தால்!

அவன் எண்ணினான்.

பெருமூச் செறிந்தான்.



# சக்தியுள்ள - - தெய்வம்

பெருங்குளம் கிராமத்திலிருந்து ஸ்ரீவைகுண்டத்திற்குச் செல்லும் ஆறு மைல் நீள ரஸ்தா அநேக இடங்களில் நீண்டும் நெளிந்தும் பல வளைவுகளாகக் கிடப்பதுடன், நெடுகிலும் விரிந்து கிடக்கிற பெரிய குளங்களின் உயர்ந்த கரையாகவும் திகழ்கிறது. ரஸ்தாவின் ஓரங்களில் சில இடங்களில் ஆலமரங்கள் உண்டு. சில இடங்களில் கொடிக்கள்ளி மரங்கள் தலைவிரித்து நிற்கும். தென்னை அல்லது பனை ஆங்காங்கே தென்படுவதும் உண்டு. இந்த வழியின் நடு மத்தியில் இருக்கிறது 'செவலை, செவலை' என்று பேச்சு வழக்கில் அடிபடுகிற சிவகலை கிராமம்.

ஸ்ரீவைகுண்டத்திலிருந்து வந்தால் சிவகலைக்குள் புகும் வழியில்—பெருங்குளத்திலிருந்து வந்தால், சிவகலையைத் தாண்டிச் செல்லும் இடத்தில்—இடைஞ்சலான வளைவும் திருப்பமுமாக ரோடு நெளிந்து கொடுக்கும். அந்த இடத்தில் ரோடு சிறிது குறுகலாக இருப்பதோடு, இருபக்கங்களிலும் நெடிதுயர்ந்து வளர்ந்த பெரிய ஆலமரங்கள் இரண்டு உண்டு. மரங்களென்றால் சாதாரண மரங்கள் அல்ல. வயசான மரம். வட்டமிட்டு கப்புங் கவருமாகி, பூமியைத் தொடும்படி விழுதுகள் வீசி வளர்ந்து நிற்கும் மரங்கள். இருட்டின் இதயம் போலிருக்கும். அந்திவேளையிலேயே அதன் அடியிலே. இரவில் கேட்கவா வேண்டும்?

ஒரு புறம் குளம். இந்தப் பக்கம் ஒரு பள்ளம். அவ்விடத்திற்கு வந்தவுடன், திறமைசாலியான வண்டிக்காரன்கூட, விழித்த கண் விழித்தபடியிருந்து லாகவமாக ஒட்ட முயல்வது சகஜம். இரவில் யாருக்குமே சற்றுக் கிலிதான். காளைகள்—எவ்வளவு உயர்ந்த ரக மாடுகளாக இருந்தாலும்—அந்த இடத்திற்கு வந்ததும் சற்று மிரளத்தான் செய்யும். கலகிற சுபாவமுள்ள மாடுகளானால், வெருவிப் பதறி ஆடும். மூக்கணாங் கயிற்றைச் சுண்டி இழுத்து, தலைப்புக் கயிறை இறுக்கிப் பிடித்து சாரத்தியம் செய்யவேண்டியது அவசியம் என்பது வண்டிக்காரர்கள் அறிந்த வித்தையே.

பொதுவாக, இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு அந்த இடத்திற்கு வரக்கூடாது என்றுதான் வண்டிக்காரர்கள் பிரார்த்தித்துக் கொள்வார்கள். இரவுப் பிரயாணம் தவிர்க்க முடியாததாகி விட்டால், முன்னிரவிலேயே அவ்விடத்தைத் தாண்டிவிடத் தவிப்பார்கள். அல்லது மூன்று மணிக்கு மேலே வண்டி போட்டுக் கொண்டு கிளம்பலாமே என்று காலங் கடத்துவார்கள்.

இதற்கு முக்கிய காரணம் உண்டு. ஆலமரத்தடியில் அரசு செலுத்தும் சாலைக்கரையான் ரொம்பப் பொல்லாத தேவதை; சக்தி வாய்ந்த சாமி என்பது அந்த வட்டாரத்தில் பிரசித்தமான சேதி.

பெருங்குளத்துக்குப் புதிதாக மாற்றலாகி வந்திருந்த ஸப்இன்ஸ்பெக்டர் முத்தையபிள்ளையிடம் அவரது வண்டிக்காரன் மாடசாமி இந்த விஷயத்தைப் பணிவுடன் சொன்னபோது, பிள்ளைவாள் அட்டகாசமாகச் சிரித்தார். 'மாடசாமி! உனக்கு இந்த முத்தையபிள்ளைவாளைப் பற்றி ஒன்றும் தெரியாது. சக்தியுள்ள சாமிகளையே ஆட்டி வைக்கும் ஆசாமி ஐயாவாள். தெரிஞ்சுக்கோ!' இப்படிச் சொல்லிவிட்டு பலமாகச் சிரித்

தார். சிரிப்பா அது! அடித்தொண்டையிலிருந்து கிளம்புகிற மிடுக்கான கனைப்பு.

மாடசாமிக்கு நெஞ்சு 'திக் திக்' கென்றது. மானசீகமாக சாலைக்கரையானை நினைத்துக் கும்பிடு போட்டான்.

'ஐயா பூடம் தெரியாமச் சாமி ஆடப் பார்க்கிறாக. சாலைக்கரையானைப் பற்றிக் கேவலமாய்ப் பேசின யாரு தான் பிழைச்சாக? நம்ம வடக்குத் தெரு காரை வீட்டுப் பிள்ளைவாள் புதுப் பணம் கிடைத்த ஜோர்லே என்ன தான் சொல்லவில்லை? சாலைக்கரைச் சாமி சும்மா விட்டுதா? புது வில்வண்டி. அருமையான மாடுக. அந்த இடத்திலே வரும்போது, குடை வண்டி சாஞ்சு, பிள்ளைவாள் பிழைச்சது மறுபிழைப் பில்லையா! ஐயா ஸப்இனிஸ்பெக்டர்ணு சாமிக்கு என்னங்கேன்? அது சக்தியுள்ள தெய்வமில்லா!' என்று முனங்கிக் கொண்டான். அதுக்காக, தான் வண்டி ஓட்ட வரமுடியாது என்று சொல்லி விட முடியுமா? வயிறு கழுவ வேலை பார்த்தாக வேண்டுமே.

தன் குலதெய்வங்களை யெல்லாம் கும்பிட்டுக் கொண்டு, சாலைக்கரையானையும் நூறு தடவை நினைத்துக் கொண்டு, வண்டியில் காளைகளைப் பூட்டினான். அந்தக் காளைகளை ஓட்டிச் செல்வதென்றாலே அவனுக்குத் தனி குஷி. நல்ல போஷிப்பில் அருமையாக வளர்ந்த கருஞ் செவலைக் காளைகள். கழுத்திலே இரண்டிரண்டு வெண்கல மணிகள். நாதம் கணீரென்று கேட்கும். கால் மைலுக்கப்பால் வண்டி வரும்போது 'இன்ஸ்பெக்டர் பிள்ளைவாள் வண்டி வருது' என்று காட்டிக் கொடுத்துவிடும் மாடுகளோ மணி மணியானவை. குறிப்பறிந்து போகும். சாட்டைக் கம்பின் பிரயோகம் தேவையே இல்லை. 'த்தா... இத்தாலே' என்று அதட்டினால், தாள் பறக்கும்

'படி. ஓடும். இவற்றில் 'இடத்தன் காளை' பரமசாது. 'வலத்தன்' கொஞ்சம் திமிரு பிடித்தது. மோட்டார் விளக்குகளைக் கண்டால் சிறிது மிரளும். ஆனால் எந்த இருட்டாக இருந்தாலும் சரி, தானாகவே தடமறிந்து நடக்கக் கூடிய மாடுகள் அவை.

என்றாலும், வண்டி பூட்ட அவனுக்குச் சம்மதமே யில்லை. 'நாளைக்குப் போனால் என்ன, எசமான்?' என்று கேட்டான்.

"சர்க்கார் சோலி பெரிசா? உன் சாமியம் பெரிசா? வண்டியைப் போடு. வீணாக நேரத்தை ஓட்டியடைச்சுக் கிட்டிராதே" என்று உறுமினார் பிள்ளை.

அவருக்குக் கோபம் வந்தால் 'கண்ணு மூக்குத் தெரியாது.' கையிலே அகப்பட்டதை எடுத்துக் கொண்டு வெளும்பச் சாத்திவிடுவார். விளாசு விளாசென்று விளாசித் தள்ளி விடுவார். 'முரட்டு முத்தைய பிள்ளை' என்றே பெயர். யாரையும் மதிக்கமாட்டார். 'அடி உதவுகிற மாதிரி அண்ணன் தம்பி உதவமாட்டான் வே' என்று அடிக்கடி சொல்லுவார். எசமான் குணம் வேலைக்காரனுக்குத் தெரியாதா!

ஸ்ரீவைகுண்டத்தில் வண்டி பூட்டும்போதே இரவு பத்து மணி ஆகி விட்டது. எவ்வளவு போனாலும் பன்னிரண்டு மணிக்கு முந்தி வீடு போய்ச் சேரமுடியாது. சாம வேளையிலே சாலைக்கரையான் பூமியில் போகவா? அதிலும் அன்று!

அன்றைக்கு அமாவாசை. தை அமாவாசை. அத்துடன் செவ்வாய்க்கிழமை—தலைச் செவ்வாயும் கூடிக் கொண்டது. இது சாமிகளுக்கு உகந்த 'உக்கிரமான நாளு' என்று அவன் கேள்விப்பட்டிருக்கிறான். வேறு எந்த வண்டியாக இருந்தாலும் கூட அவன் இவ்வளவு கலவரம் அடையமாட்டான்.

"இன்ஸ்பெக்டர் எசமான் சாமியைச் சாமின்னு மதியாமல் எக்காளம் கொழிச்சிட்டாக. அதிலும் வாற போது வேறே அகங்காரமா....'ஏ மாடசாமி. இது தானே நீ சொன்ன பூடம்! எல்லாப் பூடங்களையும் போல் செங்கல்லும் மண்ணுமாகத் தானே இருக்கு. இது என்ன சக்திவாய்ந்த சாமியோ புரியலே. ஏம்பா மாடசாமி! இந்தப் பக்கத்திலேதான் முழத்துக்கு மூணு பூடம்; சாணுக்கு ஒரு சாமியின்னு யிருக்குதே, இதையெல்லாம் கண்டு பயப்படணும்னு சொன்னு, மனிசன் வீட்டை விட்டே வெளியே வரப்படாது தெரியுதா? பூடம் தெரியாமச் சாமி ஆடுறது என்பாக. நான் சொல்லுறேன். ஆசாமியைக் கவனிச்சுக்கிட்டுத்தான் சாமியும் ஆட்ட பாட்டம் பண்ணும். ஐயாப் பிள்ளையிடம் எந்தச் சாமியும் வாலாட்ட முடியாது' என்ருக. இப்படியா பேசறது?" அவன் அதை மறக்க முடியுமா?

அப்போதுதான் வண்டி ஆலமரத்தடியில்—பந்தல் வளைவுபோல் அடர்ந்து நின்ற கிளைகளின் அடியில்-ஊர்ந்து கொண்டிருந்தது. 'பகபக பகு பக்' என்று ஓசை கேட்டது. ரொம்பத் தெளிவாக, யாரோ ஏளனச் சிரிப்பு சிரிப்பது போல் ஒலித்தது.

'கெளளி....கேட்டீகளா?....நீங்க இப்படியெல்லாம் பேசப்படாது எசமான்' என்ருன் மாடசாமி.

'பல்லி வயித்துக் கில்லாம, பசியிலே கத்தும் சவம்' என்ருர் பிள்ளை.

மீண்டும், முன்னைவிட பலமாக, 'பக பக பக்' என்று சிரித்தது கெளளி. சாலைக்கரையானே விஷமச் சிரிப்பு சிரிப்பது போலிருந்தது.

கெளளிக்கு எதிரொளி கொடுக்காமல் கேட்டுக் கொண்டிருந்தால் தோஷம் எனும் நம்பிக்கையுடைய மாடசாமி நாக்கினுல் வாய்க்குள் 'டொக் டொக்' என்று

அடித்துக் கொண்டான், 'ஏந்தான் ஐயா இந்தப் போக்கு போருகளோ, தெரியலே. இது நல்லதுக்கில்லே' என்று அவன் உள்ளம் புலம்பியது. உள்ளத்து 'அச் சானியத்தை' ஒடுக்க 'த்தா....இத்தாலே' என்று கதற லும், காளைகள் வேகமாக ஓடத் தொடங்கின. மணிநாத மும், சக்கரங்களின் கடகடப்பும் அவன் மன அரிப்பை ஒடுக்க உதவின.

இது மத்தியானம் நடந்தது. திடீரென்று ஸ்ரீவை குண்டத்திற்குக் கிளம்பினார் பிள்ளை. காலையில் புறப் பட்டுப் போய், சாயங்காலமே திரும்பிவிடலாம் என்று எண்ணினார். 'தை அம்மாசையில்லா இன்னிக்கி! அமாசை விரதமும் அதுவுமா.......' என்று வீட்டம்மா இழுக்கவே, "ஸரி, மத்தியானச் சாப்பாட்டுக்கு மேலே போறேனே" என்று ஒத்திப்போட்டார். "போய்விட்டு எந்த ராத்திரியானாலும் சரி, வீடு திரும்பிரணும். நாளைக்கு இந்த ஊரிலே முக்கிய சோலி யிருக்கு" என்றார் அவர். ஸ்ரீவைகுண்டம் சேரும்பொழுது மணி மூன்றாகி விட்டது. அவரைப் பார்த்து, இவரைப் பார்த்து, அங்கே காரியம் கவனித்து, இங்கே வம்பளந்து என்று அப்படியும் இப் படியுமாக நேரம் ஓடிவிட்டது. இராச் சாப்பாட்டை முடித்து விட்டுத்தான் போகணும் என்று நண்பர் கட் டாயப்படுத்தவே தங்கிவிட்டார். அதிகாலையில் எழுந்து போகலாமே என்ற யோசனையை மறுத்துவிட்டார். அதனால் வண்டி பூட்டவேண்டியதாயிற்று.

வண்டி போடும்போதே மாடசாமிக்குத் திகில்தான். வண்டி புறப்படும்போது 'சகுனம் சரியில்லே' என்று அவிழ்த்துப் போட்டுவிட்டு, கால் மணி நேரம் கழித்துப் பூட்டினான்.

'சரி, போயிட்டு வாறேன்' என்று சொல்லி வண்டியி லேறினார் பிள்ளை.

அப்போது பக்கத்து வீட்டிலே எவளோ ஒருத்தி தன் மகனுக்கு வாழ்த்து பாடிக்கொண்டிருந்தாள்: 'கரி முடிஞ்சு போவான், நீ ஏன் இந்தப் போக்கு போறே?'

பிள்ளை காதில் இது விழுந்ததோ என்னவோ! மாடசாமி தெளிவாகக் கேட்டான். அதற்குமேல் கேட்க விடாமல் வண்டி கடகடத்து உருண்டது. மாட்டு மணிகள் கணீரிட்டன. நிமித்திகங்களில் நம்பிக்கை குன்றாத மாடசாமி 'நல்ல நிமித்தமாக யில்லையே. இன்னைக்கு நல்லபடியாக வீடு போய்ச் சேரணும், தெய்வமே' என்று நினைத்து, தனக்குத் தெரிந்த தெய்வங்களை யெல்லாம் வேண்டிக் கொண்டான். சாலைக்கரையானுக்கு விசேஷ வேண்டுதல்.

'அப்பனே, சாலைக்கரையா, நான் புள்ளை குட்டிக்காரன். நீதான் காப்பாத்தணும். கடைசி செவ்வாயன்னைக்கு உனக்கு சேவல் கொண்டாந்து பலியிடுறேன்' என்று நேர்ந்துகொண்டான். 'கோசுப்பெட்டி'யினுள்ளிருந்த திருநீறை யெடுத்து நெற்றி நிறையப் பூசிக் கொண்டான். வண்டியை வேகமாக ஓடவிட்டான்.

முத்தைய பிள்ளை ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார். சாதாரண நாளாக இருந்திருந்தால் சாப்பாடு வெறும் தோசை உப்புமாவுமாக முடிந்திராது. 'தண்ணி', கோழிமுட்டை வெந்தது, புறுக்கறி யென்று நண்பர் வீட்டிலே விருந்து அமர்க்களமாக யிருக்கும். 'சனியன் அமாவாசையாக அல்லவா போச்சு! தரித்திரம் புடிச்ச எழவு!' என்று மனம் வருந்திக்கொண்டிருந்தது அவருக்கு. திடீரென்று சாட்டையின் சுளீர் அடி அவரைத் திடுக்கிட வைத்தது.

மாடசாமி மாடுகளைத்தான் அடித்தான். அவரையே அடித்தது போலிருந்தது பிள்ளைக்கு. மாடுகளிடம் அவ்வளவு உயிர்.

"ஏயேய்! என்னது இது? ஏனிப்படி விரட்டு விரட்னு விரட்டுறே? மாடுகளை ஏன் அடிக்கிறே?" என்று சீறினார். அதோடு "சாட்டைக் கம்பை இப்படிக் கொடு. மாடுக தான் தானுகவே வேகமாய்ப் போகுமே. நீ எதுக்காக அடிக்கணும்?" என்று கம்பை வாங்கி உள்ளே போட்டுக்கொண்டார்.

நல்ல இருட்டு. பனி வேறு அதிகம். குளிர் காற்று லேசாக நெளிந்து கொண்டிருந்தது. பாதை நெடுகிலும் சிள் வண்டுகள் 'ஙிவிங்ங்' என்று இரைந்து கொண்டிருந்தன. இருட்டில் ரஸ்தா மட்டும் வெளேரென்று தெரிந்தது. வானத்திலே கன்னங்கரிய வெல்வெட்டில் அருவக் கரம் ஏதோ தைத்துவிட்ட ஜிகினுப் பொட்டுக்களும் புள்ளிகளும் போல நட்சத்திரங்கள் நிறைந்து கிடந்தன. அந்த ரஸ்தாவில் வண்டி தனியாகப் போய்க் கொண்டிருந்தது. வண்டியின் இருப்புச் சட்டத்தின் அருகில், போலில் கட்டியிருந்த அரிக்கன் லாந்தரின் ஒளி, தீ நிற வட்டம் வரைந்து ஒடுங்கி, இருளின் எல்லையை அதிகமாக்கிக் காட்டியது. வண்டியின் ஓட்டத்துக் கேற்ப ஒளி வட்டம் ஆடி அசைந்தது. அந்த ஒளியின் உதவியால் மாடுகளின் கரிய நிழல் பெரிதாகத் தெரியும். மாடசாமி பயம் அரிக்கும் நெஞ்சினுக இருந்தான். முத்தைய பிள்ளை கண்களை மூடியபடி தலையணையில் சுகமாகச் சாய்ந்திருந்தார்.

வண்டி இரட்டை ஆலமரங்களை நெருங்கிக் கொண்டிருந்தது.

இருளைக் கிழிக்க முயன்று முடியாமல், தானும் பேரிருளாய்க் கலந்துவிட்டதுபோல் இருளோடு இருளாக நின்றன மரங்கள். ஒரே இருட்டுக் கசம். தூரத்துப் பார்வைக்கு—வெள்ளிகள் சிந்திய வெளிறிய ஒளியிலே—பூத உருவில் யாரோ தலை விரித்து, நீளக் கரங்களைத் தொங்க

விட்டு நிற்பது போல் தோன்றும். மரத்தின் தொங்கும் விழுதுகள் நெளியும் நாகங்கள் போல மருளூட்டும் ஒரு கணம்; நீண்டு தொங்கும் சடைகள் போல் தோற்ற மளிக்கும்.

சாதாரணமாக இப்படி அரண்டு மிரண்டு வருகிற மாடசாமியின் கண்களோ இல்லாத பலவற்றை வரைந்து காட்டின. முண்டாசு கட்டிய முறுக்கு மீசையான் சவுக்கு வைத்துக் கொண்டு நிற்பதுபோல் தோன்றியது அவனுக்கு. இலைகளூடே ஒடுங்கிக் கிடந்த பறவைகள் படபடவென்று சிறகடித்துக் கொண்டது அவன் அச் சத்தை அதிகரிக்கச் செய்தது. அவன் 'அப்பனே.... சாலைக்கரையா! நீதான் துணை' என்று கும்பிட்டான்.

வண்டி ஓடிக்கொண்டிருந்தது. திடீரென்று முத் தைய பிள்ளை விவரணையற்ற, தெளிவற்ற குரலிலே, ஊமைபோல் உளறினர். பதறியடித்து அலறுவது போல தொனித்தது குரல்.

பயம் மாடசாமியின் புடதியிலேறி உட்கார்ந்து அழுத்தியது. திடுக்கிட்டு 'எசமான் என்ன எசமான்?' என்று கேட்டபடி உள்ளே தலையைத் திருப்பினன் வண் டிக்காரன்.

'ஒண்ணுமில்லே, கண்ணை மூடியிருந்தேனு....தூக்கக் கிரக்கம். தூங்கியும் தூங்காததுமாக இருக்கையிலே என்னென்னவோ நினைப்பு. யாரோ என்னவோ கேட்ட மாதிரி யிருந்தது. என்னவோ சொல்ல வாயெடுத்தேன், அதுதான்' என்றான்.

'சரி சரி, தடம் பார்த்து ஓட்டு. வண்டி வேகமா கவே போகட்டும், இந்தா, சாட்டைக்கம்பு வேணும்னு னும் வச்சுக்கோ' என்று அவராகவே கொடுத்தார்.

மடசாமி வெளியே பார்வையைத் திருப்பினன். அவன் தேகம் நளுக்கிக் கொடுத்தது. உடலெல்லாம் புல்லரித்தது. நடு ரோட்டிலே கருப்பாக எவனே ஒரு சாய வேட்டிக்காரன் சுருட்டுப் பிடித்துக் கொண்டு நிற்பது அவன் பார்வையில் பட்டது. 'யாரய்யா அது, நடு ரோட்டிலே?' என்று கேட்க வாயெடுத்தான். துணிவில்லை. மாடுகள் முன்னே நகராமல் மிரண்டன. 'ஹை.... த்தா' என்று உறுமினன். வலத்தன் காளை எதையோ கண்டு பயந்ததுபோல கலைந்தது.

'மாடசாமி! ரோட்டோரமாக யாரும் நின்றுவிட்டு வண்டியைக் கடக்க ரோட்டைத் தாண்டிக் குறுக்கே போருகளா?' என்று கேட்டார் பிள்ளை, அவர் தேகம் கூட புல்லரித்தது. 'எழவு பனிவாடை என்னமாத்தானிருக்கு' என்று முனங்கிக் கொண்டார்.

மாடசாமி மனசுக்கு நன்ருகத் தெரியும். அது ஆள் அல்ல. சாமிதான். ஆமாம், சாலைக்கரைத் தெய்வம். 'சாமி, நீதான் காப்பாத்தணும்' என்று மனமாற வேண்டியபடி மாடுகளின் வாலை முறுக்கினன்.

'ஏஎய்! எதிரே மோட்டாரு வராப்லே தோணுதே' என்ருர் பிள்ளை. எதிரேகண்ணெறிந்த மாடசாமி 'அப்படி தெரியலியே. வெளிச்சமே காணேம்' என்ருன்.

'பின்னே!' பளிச்னு வெளிச்சமடிச்சுதே. நல்லக் கவனிச்சு ஓட்டு. அந்த வளைசலிலே கண்டாத் திரும்பியிருக்கோ என்னமோ....சே, இது சீண்ட்ரம் புடிச்ச இடமாகல்லா யிருக்கு....வலத்தனை ஜாக்கிரதையாக் கவனிச்சுக்கோ. கழுதை மிரளப்போவுது'

வண்டிக்காரனுக்கு வியப்பும், திகைப்பும். 'மோட்டார் லைட் ஒளியோ, சத்தமோ இல்லை. ஐயா, மோட்டார், மோட்டார் என்கிருர்களே!' அவனுக்குப் புரியவில்லை.

ஆலமரத்திலே குடியிருந்த கொக்கு இதை கேட்டாகக் கிளையில் நழுவியதனாலோ, தூக்கம் கலைந்து விட்டதாலோ சிறகைப் படபடக்க வைத்து, கரகரத்த குரலில் 'ஹார்ராங்' என்று விசித்திரமாகக் கத்தியது. இரவின் ஆழத்திலே, அமைதியின் கொலுவிலே, அந்த ஒற்றைக் குரல்கூட கோரமாகத் தான் ஒலித்தது.

மாடுகள் இக்கட்டான திருப்பத்தை—ஆலமர அடியை—நெருங்கிக் கொண்டிருந்தன.

'எசமான், காரு வர்றது போலத் தானிருக்கு' என்றான் மாடசாமி.

'காரு வறலே போலிருக்கே. அங்கேயே நிற்குதுன்னு நினைக்கிறேன். லைட்டை அணைச்சு அணைச்சுப் பொறுத்து தானே? வெறும் பய எவன்லேய் அது?' என்று கத்தினார் பிள்ளை.

'எசமான்!' என்று பயக் குரல் கொடுக்க நாவசைத்தான் மாடசாமி.

'பகபகபக்'—பல்லி சிரித்தது.

'ஏ சுருட்டு! நடு ரோட்டிலே நின்று தான் சுருட்டுக் குடிக்கணுமோ?....காரு என்ன ரிப்பேராயிட்டுதா' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

சுருட்டுப் பொறி செக்கச் செவேரிட்டு ஜொலித்தது. அதைவிட ஜோராக 'கண கண' வென்று நெருப்புக் கங்குகள் போல் ஒளிர்ந்தன அந்த ஆளின் கண்கள். அவன் சிரித்தான். அந்த இருட்டில் கூட நட்சத்திரங்கள் மாதிரி டாலடித்தன பற்கள். பற்களுக்கு அவ்வித ஒளி எங்கிருந்துதான் வந்ததோ!

பல்லி மிகவும் பலமாகச் சிரித்தது.

முத்தையா பிள்ளையின் உள்ளத்தில் உதைப்பு எடுத்தது. எதிரே நின்றது மனிதனல்ல என்பது அவருக்கு நன்றாகப் புரிந்தது. அவர் என்னவோ சொல்ல நினைத்தார்.

ஆனால் சொல்லவில்லை. அந்தக் கணத்திலே பல காரியங்கள் ஒரேயடியாக நிகழ்ந்தன.

மாடசாமி பளீரென்று சாட்டையடி கொடுத்தான் வலத்தன் காளைக்கு. பளீரென ஒளி வெள்ளம் அக் காளையின் மூஞ்சியில் பட்டுத் தெறித்தது. சடக்கென மூலை திரும்பிய மோட்டாரின் ஹெட்லைட் வெளிச்சம் போல் தெரிந்தது. மாடு மிரண்டது. அடிபட்ட வெறி, கலைசல். மிரண்டு துள்ளியது. வண்டியை இழுத்துக் கொண்டு துடித்து விலகியது. அது போன போக்கிலேயே சென்றது ஜோடிக் காளையும்.

மாடுகளை இழுத்துப் பிடிக்க முயன்றான் மாடசாமி. அவ்வேளையில் 'த்தா....இத்தாலே' என்று அதட்டல் கேட்டது.

'ஏ ஏ....மடையா, இப்பவா அதட்டது?' என்று சீறினார் பிள்ளை.

'நான் அதட்டலே. நான் சத்தமே கொடுக்கலியே' என்றான் வண்டிக்காரன்.

'பகபகபக்' என்று கௌளி கனைத்தது. சடாரென்று வண்டி குடை சாய்ந்து, பள்ளத்திலே சரிந்தது.

'எசமான்!' என்று கதறியபடி துள்ளி, இரும்புச் சட்டத்திலிருந்து கீழே குதித்து விட்டான் வண்டிக்காரன்.

முத்தையா பிள்ளைக்கு ஒன்றுமே புரியவில்லை. கூண்டிலே சடாரென அவர் மண்டை மோதிக் கொண்ட

தும், மூளையில் பொறி தெறிப்பது போல, மூளையே கலங்கிப் போனது போல்-இருந்தது அவருக்கு. வண்டி அந்தரடித்தது. தும்பு தெறிபட்டு, மாடுகள் விலகி ஓடி 'அம்மாவ்' என்று கதறின.

வண்டி ரோட்டுச் சரிவில் நழுவிப் புரண்டது. உள்ளேயே குலுக்கி எடுக்கப்பட்ட பிள்ளை வெளியே வந்து விழுந்தார். அவர் காதில், முண்டாசுப் பேர்வழி சிரிப்பது-கெக்கலித்துக்கேலி செய்து சிரிப்பது-பலமாக விழுந்தது. அருவி ஒளிபோல் ஆரவாரித்துக் கொப்புளித்துக் குமிழிட்டுத் துள்ளியது சிரிப்பொலி. அவர் தன் சுயநிலைமை இழந்தார்.

மாடசாமிக்கு ஆச்சர்யமாக இருந்தது. அவனுக்கு சிறு அடி கூடக் கிடையாது. மாடுகள் காயம் படாமலே தப்பி விட்டன. வண்டிக்குக் கூடச் சேதமேற்படவில்லை. அரிக்கன் லாம்புச் சிமினி தூள்தூளாகி யிருந்ததுதான் நஷ்டம். ஆனால் முத்தையபிள்ளைக்கு பலமான அடி.

வண்டிக்காரன் தன்னைச் சமாளித்துக் கொண்டதும், முதலில் செய்த காரியம் சாலைக்கரையாளை விழுந்து கும்பிட்டதுதான். பிறகு ஓடிப் போய், சிவகளை கிராம வாசிகள் பலரை எழுப்பி கூட்டி வந்தான். எல்லோரும் சேர்ந்து வண்டியைத் தூக்கி ரோட்டில் விட்டனர்.

இன்ஸ்பெக்டர் தானுகவே எழமுயன்றும் முடியவில்லை. இடுப்பில் பலமான காயம். மண்டையிலும் அடிபட்டிருந்தது. 'ஸ்.. அம்மா' என்று படுத்து விட்டார். அவரை மெதுவாகத் தூக்கியெடுத்து வண்டியில் கிடத்தினர். தலையணையைப் பதனமாக அண்டை கொடுத்து அவருக்கு உதவி புரிந்தனர்.

மாடுகள் ஓரத்திலேயே நின்றன. பிறகு அவை கலையவே இல்லை. அவற்றை வண்டியில் பூட்டி, மெதுவாக ஓட்டத் தொடங்கினன் மாடசாமி. இப்போது

அவன் உள்ளத்திலே திகில் இல்லை. வியப்பும் பக்தியும் தான் மேலிட்டிருந்தன.

'என்னயிருந்தாலும், இது சக்தியுள்ள தெய்வம் தான். சாமி கருணையுள்ள சாமியும் கூட. ஆளைச் சாகடிக்கிறது கிடையாது. சரியானபடி பாடம் கற்பித்து, வாழ்வு பூராவும் தன்னை மறக்கவிடாமல் செய்து விடுவதுதான் சாலைக்கரையான் குணமாக இருக்கு' என்று நினைத்துக் கொண்டான் அவன்.

கடைசிச் செவ்வாயன்று கோழி கொடுப்பது மட்டுமல்ல, பொங்கலும் இட்டு விடவேண்டியதுதான்; தனக்கு எவ்விதமான ஆபத்தும் ஏற்படாதது தெய்வக் கருணை தானே என்று மகிழ்ந்து போனான் மாடசாமி.

முத்தையபிள்ளைக்கு இடுப்பில் ஏற்பட்ட பலமான காயம் அவரைப் படுக்கையில் கிடத்தி விட்டது. அவர் டாக்டர் ஸர்டிபிகேட் பெற்று, வாதம் பலமாகப் பிடித்து படுக்கையில் தள்ளிவிட்டதால் வேலை செய்ய இயலவில்லை என்று மூன்று மாத லீவுக்கு மனுச் செய்து விட்டார்.

அத்துடன், மேலதிகாரிக்கு தனியாக ஒரு கடிதம் எழுதினார். தன்னை வேறு இடத்துக்கு மாற்றிவிட வேணுமென்று தயவாகக் கோரியிருந்தார் பிள்ளை.

'சாலைக்கரையான் சக்தியுள்ள தெய்வம்தான். சந்தேகமே யில்லை' என்று அவருக்குத் தெளிவாகப் புரிந்தது. தன்னைக் கொல்லாமல் விட்டதற்காக நன்றி செலுத்தி பிரமாதமான பூஜை போட்டார் அந்த தேவதைக்கு.



# ஞானோதயம்

அறிவுப் பசி எடுத்துத் திரிந்தான் அவன். அணு அணுவாக ஞானத்தைக் கிரகிக்க வேண்டியிருந்தது அந்த மனிதனின் நிலை.

மலர்தோறும் சென்று சென்று தேன் சேகரிக்கும் ஈயைப் போல், அவன் புத்தகம் புத்தகமாகக் கற்றாக வேண்டி யிருந்தது. ஒன்றின்மேல் ஒன்றாகக் கற்களை அடுக்கிப் பலமான சுவர் எழுப்ப நேர்வது போலவே, சிறிது சிறிதாகச் சேர்த்துத்தான் அறிவைப் பலப்படுத்த வேண்டியிருந்தது. தேகத்தில் உறுத்தும் சிறு துளியின் வேதனையைச் சகித்துச் சகித்து நல் முத்தைப் பிறப்பிக் கிற சிப்பிப் புழுவைப் போல், அவன் ஞானமுத்தைப் பெறுவதற்காக எவ்வளவோ வேதனைப் பட்டாக வேண்டி யிருந்தது.

முத்துக்களைச் சேகரிக்க ஆழ்கடலினுள் முக் குளிக்கத் துணிகிறவர்களைப் போலவே, அறிஞர்களும், சிந்தனையாளர்களும், ஞானிகளும், முன்னோர்களும் சிதறி விட்டிருந்த அனுபவ மணிகளைப் பெற ஞானக் கடலிலே திளைக்க வேண்டியிருந்தது. கரும்பாறைகளிடையே ஒளிக்கோடுகள் போல் நெளியும் தங்க ரேகைகளைக் கண்டு அங்கு பதுங்கிக் கிடக்கும் பொன்னைப் பெயர்த் தெடுக்கப் பாடுபடுகிற தொழிலாளிகளைப் போலத்தான், அவனும் ஞானச் சுரங்கத்திலே ஒவ்வொரு கணமும் ஓயாது உழைக்க வேண்டியிருந்தது.

ஞானக்கடல் மீது அறிவு யாத்திரை செய்யத் தவித்த அவன், எல்லையிலாக் கடலின் கரை ஓரத்திலே நின்று அலைகள் எற்றுகிற சிப்பிகளைப் பொறுக்கி வீண் காலம் கழிப்பதாக எண்ணுவான்; பெருமூச்செறிவான்.

அவன் உள்ளம் சொல்லும்: 'இப்படி அணு அணுவாக ஞானம் பெற முயன்று வெற்றி காண்பது எப்போது? சிறு சிறு அனுபவங்கள் மூலமே அறிவு பெற முடியும் என்றிருப்பது சரியல்ல வரி வரியாகவும், பக்கம் பக்கமாகவும் படித்துத்தான் ஒரு புத்தகத்தின் சாரத்தைக் கிரகிக்க முடிகிறது. இப்படிப் புத்தகம் புத்தமாகப் படித்துத்தான், முன்னேற்றப் பாதையிலே வெகுதூரம் சென்றுவிட்ட மனித அறிவின் ஞானக் களஞ்சியங்களைப் புரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. ஒவ்வொருவனும் இவ்விதம் தனித் தனியே உழைத்துத் தான் சுயம் பிரகாசம் அடைய முடியும். அறிவொளி சட்டென ஏற்படுமானால்! மனித மூளை ஞானம் முழுவதையும் ஒரேயடியாகக் கிரகித்துக் கொள்ள ஒரு வழி இருக்குமானால்!.......'

ஞானத்தின் எல்லையைக் கண்டுவிட ஆசைப்படும் அந்த மனிதன் பெருமூச்செறிவான்.

ஒரு நாள்.... ...

அவன் இவ்விதம் எண்ணி முடித்தபோது, மென் சிரிப்பு ஒன்று காதருகிலே ஒலிக்கக் கேட்டான்.

புதுப்புது எண்ணங்களைச் சிந்தனைத் தறியிலே நெய்து பழகும் அவன், சில சமயம் எண்ணியதையே எண்ணிக் கொண்டிருப்பது இயல்பு. எனினும், 'செவி அருகே சிறு சிரிப்பு' என்பது அவனுக்கே விளங்காத புது விஷயம்தான்.

'யாரது?....ஒருவரையும் காணவில்லையே!' என்றது மனம்.

'நீ என்னைப் பார்க்க முடியாது. நான்தான் ஞானம்' என்ற ஒலி அவன் காதருகில் ஒலித்தது.

'உன்னைப் பார்க்க முடியாவிட்டால், நீ என்னைக் கூப்பிட்டு என்ன பிரயோசனம்?' என்றான் அவன்.

'சதா நீ என்னை அடையப் பாடுபடுகிறாய். என்னை எண்ணி எண்ணி ஏங்குகிறாய். என் பூரணத்தை உணர்ந்து விடத் தவிக்கிறாய். அதனால் உனக்கு அருள்புரிய வந்தேன்' என்றது ஞானம்.

அவன் உள்ளம் சிலிர்த்தது; உடல் புல்லரித்தது. 'நான் என்ன செய்யவேண்டும்?' என்று கேட்டான்.

'உன் நெஞ்சைத் தொட்டுப் பார்த்துக் கொள். உனது அறிவிலே வைரத்தன்மை பிறந்துவிட்டதா?' ஞானப் பேரொளியைத் தாங்கிக்கொள்ளும் மின்சக்தி உன் உள்ளத்தில் இருக்கிறதா? உன்னையே நீ கேட்டுக் கொள்!'

அவன் சிரித்தான். 'மிரட்டுகிற செப்படி வித்தை பயின்ற ஏதோவொரு குறளி போலும்!' என்று எண்ணினான்.

ஞானம் நகைத்தது. 'அற்ப மனிதனே! ஞானமெனும் கடலை உன் உள்ளங்கையினால் அள்ளிக் குடிக்க ஆசைப்படுகிறாய். அடிவாரத்தில் நின்றபடியே, விண் தொடும் நீள்முடி மலையின் உயரே போய்ச் சேர்ந்துவிட விரும்புகிறாய் .......'

'வழி தவறி வந்துவிட்ட பிரசங்கி போலும்!' என்று நினைத்தான் ஞானத்தின் பக்தன்.

'நான் ஞானம்' என்றது அப் பண்பு.

'அப்படியானால், உன்னை உணரத் துடிக்கும் எனக்கு உன் பூரணப் பண்பையும் காட்டுவாயாக!' என்று கூறி நகைத்தான் அவன். 'வேண்டுமானால் பாடுகிறேன்.

புத்தகத் துள்ளுறை மாதே!
பூவில் அமர்ந்திடும் வாழ்வே!
வித்தகப் பெண்பிள்ளை நங்காய்!
வேதப் பொருளுக் கிறைவி!
முத்தின் குடை உடையாளே!
மூவுலகும் தொழு தேவி!........'

அப்புறம் அவன் பேசவில்லை. செயலற்றுப் போனான்.

வானத்துச் சூரியன் அந்த அறையினுள்ளே வந்துவிட்டது போல் ஒரே பிரகாசம்! ஒடி நெளிந்த விண்ணக ஒளிப்பாம்பு தன் மின்சக்தி முழுமையும் சேர்த்துக்கொண்டு அந்த அறையினுள் நழுவி, அவனது நெற்றியிலே வந்து தாக்கியது போலிருந்தது.

அவனால் சூழ்நிலையைப் புரிந்துகொள்ள இயலவில்லை. அவனால் அவனையே புரிந்துகொள்ள முடியவில்லை. ஞான தரிசனம் காண விரும்பிய அந்த மனிதன், ஞான ஒளி வெள்ளத்தை ஏற்றுக்கொள்ளத் திறமற்றவனாய், விழித்த கண் விழித்தபடி சிரித்த உதடுகள் சிரித்தபடி இருந்தான். நிரந்தரமாக அப்படியே மாறிப் போனான் அவன்.

'அதிர்ச்சி காரணமாக மூளை சிதறிவிட்டது. அளவுக்கு அதிகமான வேலையினால் சித்தம் பேதலித்து, இவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது!' என்று தீர்ப்புக் கூறினார்கள் வைத்திய நிபுணர்கள்.

ஞானம் சிரித்தது. அதை அந்த மனிதன் கேட்டான். மற்றவர்கள் கேட்கவில்லை.

# நல்ல முத்து

மூலைக்கரைப்பட்டிப் பண்ணையார் வெயிலுகந்த நாத பிள்ளை கால் மேல் கால் போட்டு கம்பீரமாக உட்கார்ந்திருந்தார். அவ்விதம் 'அட்டணைக் கால்' போட்டுத் திண்ணையிலமர்ந்து தெருவிலே போவோர் வருவோரை வேடிக்கை பார்ப்பதில் அவருக்கு எப்பொழுதுமே தனிமகிழ்வு. அதுவே அவரது பொழுது போக்கு. 'அது தான் அவர் வேலை. அவருக்கு வேறே என்ன வேலையிருக்கு?' என்று பலரும் சொல்வது உண்டு. அதிலும் உண்மை இருக்கலாம்.

'பொண்ணுப் பிறந்தவங்க தெருவிலே போக நீதமில்லையம்மா. எப்ப பார்த்தாலும் செக்கடிப் பிள்ளையார் மாதிரி திண்ணையிலே உட்கார்ந்து கொண்டு, போறவங்க வாறவங்களை முழிச்சுப் பாக்கிறது. சிலசமயம் பல்லைக் காட்டி இளிக்கிறது' என்பது அவ்வூர்ப் பெண்களின் பொதுவான குறைபாடு.

'அவர் அப்படிப்பல்லிளிப்பது தான் தங்கப்பல் கட்டியிருக்கிற பெருமையைக் காட்டத்தான். வேறே வித்தியாசமாக ஒண்ணும் நினைக்கவேண்டியதில்லை' என்று சிலர் சொல்வது உண்டு. ஆனாலும் அவர்கள் மனசுக்கே தெரியும், 'இது வெறும் பூச்சுமான வேலை, பெண்கள் பேச்சில் தான் உண்மை இருக்கிறது' என்பது.

பண்ணையார் வெயிலுகந்தநாதர் ஒரு மாதிரியான ஆசாமிதான். பணமும், சுகவாழ்க்கை வசதிகளும், போகாத பொழுதும் நிறைந்திருக்கும் பொழுது பண்ணையார் மகன் பண்ணையாராக வந்தவர் வேறு விதமாக வாழ விரும்புவார் என்று எதிர்பார்ப்பது தவறில்லையா?

அவருக்கு வயது கிட்டத்தட்ட நாற்பது என்று தானிருக் கட்டுமே. ஆள் வாட்டசாட்டமாக 'பார்த்தால் முப்பத்து நாலு முப்பத்தைந்து வயது தானிருக்கும்' என்று மதிப்பிடும்படி ஜம்மென்றிருந்தார்.

அவர் இஷ்டம்போல் அலைவதற்கு முக்கிய காரண மே அவரது மனைவி சுத்த நோஞ்சல் பேர்வழியாக—நோய் பிடித்த எலும்புக் கூடாக—இருந்தது தான் என்று அபிப்பிராயப்பட்டார்கள். அதிலும் உண்மை யிருக்க லாம். ஆனால் அதுவே முழுமுதற் காரணமாகிவிட முடி யாது. பண்ணையாரின் பண்பாடே அது என்றுதான் சொல்லவேண்டும்.

ஸ்ரீமதி வெயிலுகந்தநாதர் என அழைக்கப்பட வேண்டிய நாச்சியாரம்மா காசநோயில் அடிபட்டு மிக வும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். அந்தக் கொடு நோய் பற்றுவதற்கு முன்புகூட அவள் 'உடலிலே சீவன் இல்லாதவள்' தான். வானத்திலே மூடாக்குப் போட வேண்டியதுதான்; அவள் உடலைச் சாய்த்து விடுவாள் கீழே, 'ஜலதோஷம் காய்ச்சல்' என்று ஒன்றில்லா விட் டால் இன்னொன்று! அவளுடைய அம்மா அடிக்கடி சொல்லுவாள் 'குற்றாலத்திலே சாரல் கட்டுதோ இல்லை யோ, உடனேயே இங்கே நாச்சியாரு மண்டையிலே சாரல் கடுமையாகக் கவிந்து விடும்' என்று.

'நாச்சியாருக்கு நீர்க்கொண்டிருக்கு' (அதுதான் ஜலதோஷம்) 'நம்ம வீட்டுப் பெண்ணுக்கு உடம்பு கத கதன்னு இருக்கு. காச்சல் வந்துவிடுமோன்னு பயமா ருக்கு' என்றமாதிரிப் பேச்சு அவர்கள் வீட்டில் ஒலிக்காத காலம் மிகக் குறைவாகத்தானிருக்கும். 'உன்மகளுக்குக் கல்யாணம் பண்ணி அனுப்பையிலே, கூட ஒரு தொசரை யும் ஆஸ்பத்திரியையும் சேர்த்து அனுப்ப வேண்டியது தான்' என்று வேடிக்கையாகவும் வினையாகவும் தொனிக் கும்படி பேசுவார் தந்தை. 'என்ன செய்வது, அவ

பொறந்த நேரம் அப்படி!' என்று தேற்றிக் கொள்வாள் தாய்.

நாச்சியாருக்கும் கல்யாணம் நடக்கத்தான் செய்தது. நல்ல இடத்துச் சம்பந்தம்தான். சொத்துச் சுகமெல்லாம் இருக்கிறபோது, ரொக்கம் நகை பண்ட பாத்திரங்கள் என்று பணத்தை அள்ளிக்கொடுக்கிறதுடன் நில்லாது பெண் பேருக்கு ஏராளமான நிலபுலன்களையும் எழுதி வைக்க முன் வருகிறபோது, பண்ணையார் வீட்டுச் சம்பந்தம்தானு கிடைக்காது போய்விடும்? ராஜா மகன் கூட 'வீட்டு மாப்பிள்ளையாக' வந்து இறங்க முடியுமே! அப்படி ராஜா மகன் மருமகப்பிள்ளையாக வந்து சேரவில்லையே என்றால், அதற்குத் திருநெல்வேலி ஜில்லாவிலே— அதிலும் ஸ்ரீமான் இளையபெருமாள் பிள்ளையவர்களின் இனத்திலே—ராஜா மகன் யாரும் இல்லாததுதான் காரணமே தவிர வேறல்ல.

அதனால் என்ன கெட்டுப் போயிற்று? பண்ணையார் வெயிலுகந்தநாதர் ஒரு ராஜா மாதிரித்தான். தனக்குத் தானே ராஜா என்பதைச் சொல்லவில்லை. அக்குலத்திற்கே தனி ராஜா அவர். அத்துடன் அந்த ஊருக்கும் ராஜாதான். அவர் ஆக்கினைகள் செல்லுபடியாகும் அங்கே. அவர் பெயருக்கு ஒரு அந்தஸ்து, மதிப்பு, பயம், பக்தி எல்லாமிருந்தன. ஆகவே அவர் தெருவில் உட்கார்ந்து போவோர் வருவோரைப் பார்த்துக் கொண்டிருப்பதைப் பற்றி யாரும் 'பேச்சு மூச்சு'காட்டப்படாது. அப்படிப் பேசிக் குறைகூறிக் கொண்டால், அது அவர் காதுக்கு எட்டக் கூடாது. அதுதான் முக்கியம். அந்த ஊர் ஜனங்களால் இம் முக்கிய விதியைக்கூடவா அனுஷ்டிக்க முடியாது!

பண்ணையாருக்கு வாழ்க்கைக் குறைவு எதுவுமில்லை. ஆனாலும் அவருக்கு வருத்தம் வருத்தம்தான். குலவிளக்காக வந்த மனைவி நோய் நொடியில்லாமல் வாழும்

கட்டரசியாக இல்லையே என்று. அவளைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவருக்குப் பரிதாப உணர்ச்சியே மிகும். மனைவியிடம் பண்ணையாருக்கு அன்பு இல்லாம லில்லை. ஆனால் அன்பைவிட மூன்று மடங்கு அனுதாப மிருந்தது. அதை எவரும் எளிதில் உணர முடியும்.

'சொத்து, நகை, பட்டு எல்லாம் எவ்வளவு இருந் தால்தானென்ன? அவற்றை வைத்து ஆண்டு அனுபவிப் பதற்கு வேண்டிய தேக சுகம் இல்லையென்றால் அப்புறம் வாழ்க்கையிலே என்ன இருக்கு? நாச்சியாருக்கு பிறந்த வீட்டிலும், புகுந்த இடத்திலும் இல்லாத செளகரியம் கிடையவே கிடையாது. ஆனால் அவள் உடலிலே தெம்பு இல்லையே!' என்ற அங்கலாய்ப்பு அவருக்கு. 'அவள் தேகவாக்கு அப்படி' என்று எண்ணிக்கொள்வார் அவர்.

மஞ்சளைத் தொட்டால் கூட அது கரியாக மாறிவிடு மாம். சிலர் கை ராசி அவ்விதமிருக்குமாம்! அதை அறிய வெயிலுகந்தநாதர் அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் அவர் ஆசையாக வாங்கி மாலையாகத் தொடுத்த நல்முத்துக்களை நாச்சியார் ஆசையோடுதான் அணிந்து கொண்டாள்.

இளநிலவு எறியும் இனிய ஜாதிமுத்துக்கள் அவை. புதுமைப் பளபளப்பிலே மிகவும் வசீகரமாக விளங்கின. அந்த முத்துமாலையைப் பார்க்கும் யாரும் ஆசையுடன் வாங்கிக் கையில் வைத்துக்கொண்டு வெகுநேரம் கண்டு களிக்கவேணும் என்று எண்ணாமலிருக்க முடியாது. அழகிய கழுத்தை அரவணைத்துத் தொங்கினால் அம்மாலை யும் தானும் அதிக அழகு பெற முடியுமே என்ற எண்ணம் எந்தப் பெண்ணுக்கும் ஏற்படுவது இயல்புதான். அழகி என்று தானே ஒவ்வொரு பெண்ணும் நம்பி வாழ்கிறாள்!

நாச்சியரம்மா ஆசையோடுதான் முத்து மாலையை அணிந்து கொண்டாள். குழிவிழுந்த தோளில், கொக்குக்

கழுத்து மாதிரி நீண்ட தொண்டையைச் சுற்றிக் கிடந்த முத்துமாலை அழகியின் புன்னகைபோல் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. போட்ட புதுசில் அப்படி. பிறகு நாளாக ஆக மங்கி வந்தது. அப்புறமென்ன! 'தெய்வயானை கோயில் விளக்கு'ப் போல மினுக்குமினுக்கென்று அழுது வழிந்தது.

'இது நல்முத்து இல்லை. அதுதான் மங்கிப் போச்சு' என்று அடிக்கடி முணங்குவாள் ஸ்ரீமதி. பண்ணையார் எதுவுமே சொல்ல மாட்டார். அனுபவஸ்தர்களிடம் காட்டி அருமையான முத்துக்கள் என்று பாராட்டுப் பெற்றவைகளைத்தான் மாலையாகக் கட்டச் செய்திருந்தார். பின்னே அவை ஒளியிழந்து போனதேன்? கட்டிப் போட்டு சரியாக ஒரு வருஷம் கூட ஆகவில்லையே!

'சில முத்துக்கள் இப்படித்தான் காலப் போக்கிலே மங்கிப் போகும் போலிருக்கு' என்று தம் மனதைச் சமாதானப்படுத்த முயன்றார் அவர். நாளுக்கு நாள் முத்து ஒளியிழந்து கொண்டிருப்பதாகவே தோன்றியது. அது என்ன கோளாறோ அவருக்குப் புரியவில்லை.

அன்று அதிகாலையில் எழுந்து வேப்பங்குச்சியும் கையுமாகத் திண்ணையிலமர்ந்து பல் துலக்கும் காரியத்தில் ஈடுபட்ட வெயிலுகந்தநாத பிள்ளை திடீரென முத்து மாலையைப் பற்றி எண்ண நேர்ந்தது. அதற்குரிய அவசியத்தை உண்டாக்கியது—

வீதி வழியாகச் சென்ற ஒரு பெண்ணின் கழுத்திலே கிடந்த முத்து மாலைதான்.

மேற்கு திசையிலிருந்து கிழக்குத் திக்கு நோக்கி நடந்து கொண்டிருந்தாள் அவள். காலை இளம் வெயில் அவளுக்குத் தனிமெருகு பூசியது. ஆரோக்கியத்தின் அழகு நிலையமாக விளங்கிய அவள் உடல் உழைப்பினால் உறுதி பெற்றிருந்தது. இயற்கை வெளியிலேயே தங்கி

இயற்கை வாழ்வு வாழ்கிறவள் அவள் என்பதை அவள் தோற்றமே தெரிவித்தது. நாடோடிக் கூட்ட மொரன்றைச் சேர்ந்தவள் அவள். தழையத் தழையத் தழுவிப் புரண்ட பாவாடையும், மேலே தாவணியாகக் கிடந்த வர்ணத் துணியும், கூந்தலை அள்ளிச் செருகிப் 'பங்கொண்டை' போட்டிருந்த அழகும், சிரிப்பு தவழ்ந்த முகமும், குறு குறுத்த விழிகளும் ஒரு முறை பார்த்தவர்களின் கண்களைக் கவர்ந்து, மறுதடவையும், மற்றுமோர் முறையும் பார்க்கும்படி செய்யும் தன்மை பெற்றிருந்தன.

துள்ளலும் துடிப்பும் நிறைந்த அந்தப் பெண் பண்ணையாரின் பார்வையையும் மனதையும் கவர்ந்ததில் வியப்பில்லை. அவர் கவனத்தை அதிகம் கவர்ந்தது அவள் கழுத்திலே கிடந்த முத்து மாலை. எதிர் வெயில் ஏற்றுத் தனி ஒளி தெறித்து மின்னியது அது. 'அது கண்ணாடி முத்து வடமாக இருக்கும்' என்று எண்ணினார். 'கழைக் கூத்தாடிச்சி நிஜ முத்து மாலையா வாங்கிப் போட்டுக் கொள்ள போகிறு!' என்று தோன்றியது அவருக்கு. 'யாராவது பரிசாகக் கொடுத்திருந்தால்?' எனும் சந்தேகமும் எழுந்தது.

அவர் தன்னையே வைத்த கண்வாங்காது கவனிப்பதைக் கண்டு அவள் சடக்கென நின்ருள். குறும்புச் சிரிப்புடன் 'என்னசாமி, ஏன் இப்படிப் பாக்கிறே?' என்று கேட்டாள்.

இத்தகைய நேரடியான தாக்குதலை எதிர்பாராத வெயிலுகந்தநாதர் சிறிது திணறிப் போனர். பிறகு சமாளித்துக்கொண்டு 'அந்தப் பாசிமணிமாலை பளபளன்னு அருமையாக மின்னுதே. அது மாதிரி விலைக்கிக் கிடைக்குமான்னு கேட்கலாமா என்று யோசித்தேன்' என்ருர்.

அவளுக்கு அவ்வளவு கோபம் பொங்கி வரும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. 'கண்ணாடிப் பாசியா? எது சாமி பாசிமணி? நீ முத்துமாலையே பார்த்ததில்லே போலிருக்கு. ஜாதி முத்து இது. இதைப் போயி கண்ணாடி வடம்கிறியே' என்று எரிந்து விழுந்தாள் அவள்.

'ஏ புள்ளே, ஏனிப்படி கத்துறே? முத்து மாலைக்கு இவ்வளவு பளபளப்பு எங்கேயிருந்து வந்தது?'

அவரை மேலே பேசும்படி விடவில்லை அவள். 'ஏன் சாமிஇப்படிப் பேசுறே? நல்முத்து பார்த்தாலே தெரியுமே கண்ணு பூத்துப் போச்சுதா உனக்கு? இந்தா இதைப் பாரு!' என்று அவள் மாலையைக் கழற்றி அவரிடம் நீட்டினாள்.

பண்ணையார் அதை வாங்கிப் பார்த்தார். கையில் வைத்து உருட்டிப் பார்த்தார். கண்ணருகில் வைத்தும் எட்ட நீட்டியும் பலவிதமாகவும் கண்டு களித்தார். சந்தேகமேயில்லை. 'ஆணிமுத்து என்பதில் கொஞ்சம் கூடச் சந்தேகமே கிடையாது. அருமையான மாலைதான்' என்று பேசியது அவர் மனம்.

'இது இப்பதான் புதுசாகச் செய்து போட்டதா?' என்று கேட்டார்.

ஒயிலாகத் தலையசைத்து, நாட்டியமாடிய கண்களை மேலும் குதித்தாடச் செய்து, அமைதியென்பதையே அறியாதவள் போல் ஆடியும் அசைந்தும் நின்றுகொண்டே அவள் சொன்னாள்: 'ஊஹூம் இது எனக்குக் கிடைச்சு ஒரு வருஷத்திற்கு மேலே ஆகுது. சிவகிரி ஜமீன்லே நாங்கள் கழைக்கூத்து ஆடிக் காட்டினபோது ஜமீன்தாரு இனாமாக் கொடுத்தாரு. அதிலேயிருந்து அது என் கழுத்திலேதான் கிடைக்குது.'

'மங்கவே யில்லையா?'

'மங்கவுமில்லை மாறவுமில்லை. என் மேலே கிடக்கிற முத்துமாலை எதுக்காக மங்கப் போகுது?' என்றாள் அவள் கர்வமாக.

பண்ணையார் தன் மனைவி கழுத்தில் கிடந்த முத்து மாலை மங்கிவிட்டதைச் சொன்னார்.

'எங்கே, அந்த மாலையைப் பார்க்கலாம்' என்றாள் அவள்.

பண்ணையார் ஸ்ரீமதியைக் கூப்பிட்டார். நடமாடும் எலும்புக் கூடாக வந்து நின்றாள் அவள். கணவனின் கையிலிருந்த முத்து மாலையின் அழகொளி நாச்சியாரின் உள்ளத்தை வசிகரித்தது.

'எங்கே பார்க்கலாம்' என்று ஆசையுடன் கை நீட்டி வாங்கினாள்.

அவள் அணிந்திருந்த மாலையை வாங்கிப் பண்ணையார் கூத்தாடிப் பெண்ணிடம் கொடுத்தார். அவள் அதை நன்கு கவனித்தாள். நாச்சியாரம்மாளையும் பார்த்தாள். 'இது ரொம்ப நல்ல முத்துதான் சாமி' என்றாள்.

'நல் முத்துதான். ஆனால் ஒளி மங்கிப் போச்சு. அதுக்குப் பழைய மினுமினுப்பு வர மாட்டேங்கிறதே' என்று வருத்தமாகச் சொன்னார் அவர். ஸ்ரீமதியோ ஒளி மிகுந்த முத்துமாலையின் வனப்பிலே சொக்கி நின்றாள்.

நாடோடி மங்கை சிரித்தாள். அவள் சிரிப்பிலே கூட முத்து உதிரும் போலும் என்று தோன்றியது அவருக்கு.

'சாமி இந்த முத்துகளுக்குத் திரும்பவும் பிரகாசம் வரணுமானல், இந்த மாலையை என்னிடம் கொடுத்து வையுங்க. பதிலுக்கு அந்த மாலையை நீங்களே வச்சிருங்க

ஏழெட்டு மாசம் கழிச்சு நான் இங்கே திரும்பி வரும் போது முத்து எப்படியிருக்கும்னு பாருங்க' என்றாள்.

அவளது ஆடும் கண்களில், துடிக்கும் உதடுகளில் விழிபதித்துக் கிரங்கியிருந்த பண்ணையாருக்கு அவள் பேச்சில் சூது இல்லை என்று பட்டது. 'அப்படியே செய்யலாமே!' என்றார்.

'அப்போ இந்த மாலையை நான் போட்டுக் கொள்ளலாமா?' என்று ஆசையுடன் வினவினாள் நாச்சியாரம்மா.

'ஆகா' என்று தலையசைத்தாள் நாடோடிப் பெண். அவள் போவதற்கு முன்பு பண்ணையார் அவள் பெயரை விசாரித்தறியத் தவறவில்லை. பெயர் 'சிங்காரம்' என்று சொன்னாள் அவள். சிங்காரிக்கு ஏற்ற பெயர்தான் என நினைத்து மகிழ்ந்து போனார் அவர்.

பண்ணையார் வெயிலுகந்தநாதபிள்ளை திடீரெனவந்து போன கூத்தாடிப் பெண்ணை மறந்துவிடவில்லை. அவர் மனைவி அணிந்துகொண்ட முத்துமாலை மறந்து போகும்படி விடவுமில்லை. பளபளவென மின்னிய முத்துமாலை ஒன்றிரு மாதங்களிலேயே ஒளி குறைந்துவிட்டதாகத் தோன்றியது அவருக்கு. முதலில் அது வெறும் நினைப்புதான் என்று எண்ணித் தன்னையே ஏமாற்றிக் கொள்ள முயன்றார் அவர். ஆனாலும் உண்மை கண்களை உறுத்தி நெஞ்சைக் குத்திக் குடைந்தது.

காலப் போக்கிலே முத்துமாலை மங்கி, நாச்சியார் முதன் முதலில் அணிந்திருந்த மாலை போலவே மாறி விட்டது. பண்ணையாருக்கு எவ்வளவோ வருத்தம். 'அவள் ஏமாற்றியிருப்பாளோ' என்ற சந்தேகமும் கூட.

'சே, அப்படி நினைப்பதே தப்பு. நன்றாகக் கவனித்துப் பார்த்துத் தானே மாற்றினேன்' என்று தன்னையே கடிந்து கொள்வார் அவர். அவள் சொல்லிவிட்டுப் போன

படி திரும்பி வருவாளோ மாட்டாளோ என்ற கவலையும் பிறந்தது 'நன்றாக இருந்த முத்துமாலை நாச்சியார் கை பட்டதும் ஒளியிழந்து போவானேன்? மந்திரமா, மாயமா? இல்லை, இவள் உடல் கோளாறு தானோ?' என்று மனதைக் குழப்பிக் கொண்டிருந்தார் அவர்.

நாச்சியாரின் உடலைப் பற்றி எண்ணும் போதெல்லாம், வெயிலுகந்த நாதருக்குக் காலைப் பொன் வெயிலில் தகதகத்து நின்ற கட்டழகு மேனிக்காரி சிங்காரி தோற்றமே கண்முன் நிற்கும். 'அழகும் ஆரோக்கியமுமாகயிருக்கிறாள் அவள். இவளோ சுத்த நோஞ்சான். எப்ப பார்த்தாலும் சிக்குதான்!' என்று முனங்குவார் அவர்.

பண்ணையார் வெயிலுகந்த நாதர் ஏமாறவில்லை. எட்டு மாதங்களுக்குப் பிறகு ஒருநாள்—மழைகாலம், பனிக்காலமெல்லாம் போய் கோடை அருமையான வெயிலுடன் முன்னேறியபோது, மரங்கள் பல இலை உதிர்ந்து மொட்டையாக நின்று பின் எழில் நிறைந்த இளந்தளிர்கள் தாங்கிப் புத்தம் புது வனப்புடன் மிளிர்ந்த பொழுது, விண்ணும் மண்ணும் மரங்களடர்ந்த சூழலும் பலவும் அற்புதக் காட்சிகளாக இலங்கிய நாட்களில் ஒருநாள்—பண்ணையார் வழக்கம் போல் வெயில் எங்கும் பூசிய ஒளி முலாம் கண்டு மகிழ்ந்திருந்தார்.

அவர் எதிர்பாராத வேளையிலே 'சாமி, வந்துட்டேன்!' என்ற களி துலங்கும் குரலில் கூவியபடி வந்து நின்றாள் சிங்காரம். திடுக்கிட்டு நோக்கிய பண்ணையார் திகைப்புற்றார். மகிழ்வடைந்தார். வியப்பினால் விரிந்த கண்களை மீட்டுக் கொள்ளாமல் அவள் வனப்பை ரசித்தபடி இருந்தார்.

'பார்த்தியா சாமி! நீ கொடுத்த முத்துமாலை. இப்ப எப்படி யிருக்குது பாரு, தகதகான்னு. அப்படியே சொக்க வைக்குதா!' என்று அவள் கூறியதுதான் அவள்

கழுத்திலே கிடந்த மாலையைக் கவனித்தார் அவர். அவர் கண்களையே நம்ப முடியவில்லை. ஒவ்வொரு முத்தும் தனித்தனி நட்சத்திரம் போல் ஜொலித்துக் கொண்டிருந்தது. சிங்காரம் கூட முன்னிருந்ததை விடப் புதுமையான வனப்புடன் விளங்குவதாக நினைத்தார் அவர்.

'சிங்காரம், நீ பெரிய மந்திரக்காரி போலிருக்கு. இங்கே கொடுத்துவிட்டுப் போன முத்துமாலை ஒரேயடியாக மங்கிப் போச்சு. அதனுடைய பளபளப்பெல்லாம் உன் கழுத்திலே கிடக்கிற மாலைக்கு வந்திருக்குதே. இது கூடு விட்டுக் கூடு பாய்கிற வித்தை மாதிரியல்லவா தோணுது. ஏதாவது சூனிய வேலையா சிங்காரம்?' என்று பாதி விளையாட்டாகவும் பாதி நிஜமாகவுமே விசாரித்தார் அவர்.

'மந்திரமுமில்லை, சூனியமுமில்லை சாமி. நல்முத்து குணமே அது. தேகத்திலே பட்டுப் பட்டு, போட்டிருக்கிறவங்க ரத்தத்திலேயிருந்து சத்து ஏற்று மின்னும் அது. உங்க வீட்டு அம்மா தேகத்திலே நல்ல ரத்தம் எங்கேயிருக்குது? அதனலேதான் நல்ல முத்துக்கள் கூட மண்ணுருண்டை மாதிரி மாறிப்போகுது. நான் ஊரு சுற்றி உழைக்கிறேன். என் உடலிலே தெம்பு இருக்கு. முத்துக்கள் ஏன் மங்கப்போகுது. இந்தா சாமி உன் மாலை. இதை எடுத்துக்கிட்டு அந்த மாலையைக் கொடுத்திரு சாமி' என்ருள்.

பண்ணையார் வெயிலுகந்தநாதர் என்னென்னவோ எண்ணினுர். இரண்டு மாலைகளையும் அவளுக்கே கொடுத்து அவளைத் தன் ஆசை நாயகியாக ஆக்கிக் கொள்ளலாமே என்று கூட நினைத்தார். தன் ஆசையைச் சொல்லத் தயங்கினுர். அதற்குள் அவள் அவசரப்படுத்தினுள்.

'அந்த மாலையைக் கொடு சாமி. நான் போகணும். நான் ஊர் சுற்றுகிறவ. ஒரு இடத்திலே என்னல்

இருக்க முடியாது.' அவள் பாட்டிற்குப் பேசிக் கொண்டிருந்தாள். அவள் தன் கள்ள நினைப்பை எவ்விதமோ உணர்ந்து விட்டதனால் தான் அப்படிப் பேசுகிறாளோ என்று அஞ்சினார் அவர். உள்ளே சென்று சிங்காரத்தின் முத்துமாலையைக் கொண்டு வந்து கொடுத்தார். அவள் அதைப் பெற்றதும் துள்ளிக் குதித்தபடி போய் மறைந்தாள்.

அவள் போகும் அழகையே கவனித்து நின்ற பண்ணையார் பெருமூச்செறிந்தார். 'நல்ல புள்ளே. கருளாக்கட்டை மாதிரி, கருமெழுகிலே உருட்டித் திரட்டி யெடுத்த பொம்மைபோல இருக்கிறா. இயற்கை வெளியிலே வாழ்ந்து வளரும் மணிப்புறா இவள். இவளே ஒரு நல்லமுத்துதான்' என்று நினைத்தார். மற்றுமொரு நெடுமூச்சு பொங்கி வந்தது. மீண்டும் அவர் பார்வை வீதியிலே புரண்டபோது, வெயில் நிறைந்து கிடந்த தெரு சூன்யமாகத்தான் காட்சியளித்தது.



# நீதியின் கண்ணீர்

நீதித் தெய்வத்திற்கு ஒரு ஆசை பிறந்தது. பூலோகத்துக்கு விஜயம் செய்து, தனது அருள் அங்கு எப்படிப் பரிணமிக்கிறது என்று அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல்தான்.

தெய்வங்களுக்கெல்லாம் இதுமாதிரி ஒரு ஆசை திடீரென்று ஏற்பட்டுவிடுமாம். அப்படித்தான் பக்தர்கள் சொல்கிறார்கள். ஆகவே, நீதியின் தேவு அத்தகைய சபலத்துக்கு உள்ளானதில் ஆச்சரியம் எதுவுமில்லை தான்.

நிலவொளியிலிருந்து திரட்டி எடுத்த சிலை போன்ற உருவம், இள ஞாயிற்றின் ஒளிக் கதிர்கள் புரண்டு சுழல்வது போல மினுமினுக்கும் பொன் மயக் குழற் கற்றை, சரிகைக் கரை இடாத வெண் முகிலை எடுத்துப் போர்த்துக் கொண்டது போல் மிளிரும் ஆடை. கையிலே வாடாத தராசு, நேர்மையின் சின்னமாக! கருவண்டுகள் போல் சுழல வேண்டிய கண்களை மூடித் திரையிடும் மெல்லிய துணி—பகட்டுகளினால் பார்வை கூசி நீதி நிலை தவறிவிடக் கூடாதே என்ற உயர்ந்த நோக்கத்தில் பிறந்த பாதுகாப்பு அது.

இவ்விதம் தனக்கே உரிய கோலத்துடன் உலாக் கிளம்பியது நீதியின் தெய்வம். மிடுக்காக நடந்தது. ஒளியோடு ஒளியாக நீந்தியது. காற்றோடு காற்றாக மிதந்து வந்தது.

தெய்வங்கள் எல்லாம் எப்படியும் பிரயாணம் செய்யும். எங்கு வேண்டுமானாலும் போகும். பிறர் கண்களில் தென்படாமலே மனிதரிடையே உலவும் என்று

தானே பக்தர்கள் சொல்கிறார்கள்? ஆகையினாலே, நீதித் தெய்வம் மனிதரிடையே வந்து சேர்ந்தது யாருக்குமே தெரியாமல் போனதில் வியப்பில்லை.

கோயில்போல் கட்டிடம் அமைத்து, சட்டத்தின் பாதுகாவலர்கள் கொலுவிருந்து, மனிதரிடையே நியாயத்தை விதைத்து வளர்த்துப் போற்றுவதற்குப் பாடு படும் நகரம் ஒன்றை அடைந்த தேவு, தனது பக்தர்களின் ஆட்சியை அறிய அவாவியது. நியாய சபைக்குள் சென்றது.

அங்கே....

நியாயத்தை நிலைநாட்டுவதற்காக வாதுகள் நடந்தன. கஷ்டமான முயற்சியிலே அலுப்பு ஏற்படாமல் இருப்பதற்காக வாய்தாக்கள்—வாய்தாவுக்குமேல் வாய்தாக்கள்—போடப்பட்டன. சட்டங்கள் அலசிப் பிழியப் பெற்றன. சாட்சிகள், வெற்றிக்கோ தோல்விக்கோ 'தோன்றாத் துணை'கள் ஆயினர்

சாட்சியங்கள், வாதமிடுவோரின் வாக்கு சாதுரியங்கள், திரை மறைவிலே புரளும் பணச் சக்தி முதலியவை வெற்றி பெற்றன. 'தர்மத்தின் வாழ்வதனை சூது கவ்வக் கண்டது நீதித் தெய்வம்.

அதாவது, தனக்கே உரிய அதீதத் தன்மையினால் உணர்ந்தது அத்தெய்வம். இடையிடையே 'தர்மமும் வெல்லக் கண்டு' மகிழ்ச்சியுற்றது! முடிவாக ஒரு விஷயத்தின்மூலம் தன் மனதைத் திருப்திப்படுத்திக்கொண்டு தனது இடத்திற்கே திரும்பிவிட எண்ணியது நீதி.

ஒரு வழக்கு, பணமும், படாடோபமும், அந்தஸ்தும், அதிகாரமும் பெற்ற கனவான் ஒருவர் காரோட்டிச் சென்றார். அப்போது அவர் தேகத்து நரம்புகளிலே மதுவெறி கிறுகிறுத்தது. மூளையிலே மங்கை வெறி

கொதிப்பேற்றிக் கொண்டிருந்தது. தனக்காகக் காத்திருக்கும் மதனராணி, மனமோகினி, சினிமாக் குயில் 'புல்புல்தாரா'வைக் காணச் செல்லும் லட்சியவாதி அவர். ஆகவே, உல்லாசக் காரை 'கண்ணு மூக்குத் தெரியாத வேகத்திலே' ஓட்டிச் சென்றார். ஒரு மனிதப் பிராணி அந்த வேளையில்தானு ரஸ்தாவைக் கடக்க முயலவேணும்? மூளை வேண்டாம் அம் மடையனுக்கு? சீமானின் காரிலே சிக்கிச் செத்தான் அல்பன்! அவரது அவசரத்தைக் கெடுத்துவிட்டான்.

முறைப்படி வழக்கு தொடரப்பட்டது. விசாரணை-வாய்தாக்கள்-வாதப் பிரதிவாதங்கள். அன்று தீர்ப்பு நாள்.

சீமான் குற்றவாளி அல்ல. செத்தவனே குற்றம் செய்தான். வேகமாக மோட்டார் வருவதை அறிந்தும் ரோட்டைக் கடக்க முயன்றது அவன் குற்றம். அவனே காரில் வந்து சிக்கித் தனது தவறின் தண்டனையை அனுபவித்தான்.—நீதியும் அறிவும் தந்த முடிவுரை இது.

'நீதி நன்று! அது வாழ்க!' என்றனர் சீமானின் அன்பர்கள்.

'வாழ்க்கை எனும் பொம்மலாட்டத்தில் மனிதப் பாவைகளை ஆட்டி வைக்கும் சூத்திரக் கயிறு பணம். சமுதாயத்திலே பணம் படைத்தவனே சூத்திரதாரி' என்று முனங்கினர் சிந்திக்கத் தெரிந்தவர்கள்.

'பணம் பலவும் பண்ணுமையா!' என்றார்கள் அப்பாவி மக்கள்.

நீதித் தெய்வத்தின் வலது கண்ணிலிருந்து பெரிய நீர்த்துளி ஒன்று சொட்டியது.

நீதியின் தேவு நகரவில்லை. அறிய விரும்பிய முடிவின் மறுபாதியை உணர்வதற்காகக் காத்து நின்றது அது.

மற்றுமொரு வழக்கு—

ஒரு ட்ரைவர் ரோட்டோரத்தில் நின்ற ஒரு மனிதன் மீது காரை ஏற்றிவிட்டான். கூலிக் காரோட்டி அவன். எதிரே ஒரு பெரிய கார் வந்தது. வேகமாக வந்த காரினால் விபத்து விளையலாம் என்று அஞ்சிய ட்ரைவர் தன் காரை விலக்கினான். பிளாட்பாரத்தை விட்டுக் கீழிறங்கி நடந்த ஒரு நபர் மீது ஏறிவிட்டது கார். சந்தர்ப்பச் சதி அது....காரோட்டி ஏழை. கிடைக்கும் கூலி வயிறு நிறையச் சாப்பாடு கிட்ட வகை செய்வதில்லை. அவனை நம்பி ஒரு மனைவியும் மூன்று மக்களும் இருக்கிறார்கள். கருணையுடன் நியாயம் வழங்கப்பட வேண்டும் என்று கோரப்பட்டது.

'குற்றவாளி அவன். அஞ்சு வருஷம் சிறைத் தண்டனை' என்று தீர்ப்புக் கிடைத்தது.

'நீதி நன்று! அது வாழ்க!' என்று ஆரவாரித்தது சட்டம்.

'ஏழைக்கொரு நீதி! பணம் படைத்தவனுக்கு ஒரு நியாயம்! சமதர்மம் இல்லாத சமுதாயத்திலே இப்படித் தானிருக்கும்' என்று முனங்கினார்கள் சிந்திக்கத் தெரிந்தவர்கள்.

நீதியின் இடது கண்ணிலிருந்து பெருந்துளி ஒன்று உருண்டது.

பெருமூச்செறிந்தது நீதியின் தெய்வம். அதன் கண்களிலிருந்து பெருகிய வேதனைத் துளிகளினால் அதனுடைய வெண்மயப் புனித ஆடை கறைப்பட்டது. மேலும் அங்கு நிற்க விரும்பவில்லை அது.

இருளோடு இருளாகி, வந்த விதமே மீண்டது நீதித் தெய்வம்.

# புத்தரின் பேரன்கள்

பட்டணத்திலே—

காரோடும், டிராம் ஓடும், கடும் வெயிலால் தார் இளகி ஓடும், வீதிகளில் ஒரு வீதி.

மாமிச பர்வதங்களையும், சாயம் தீட்டிய பொம்மை களையும் சுமந்தபடி பளபளப் பிளஷர்கள் வேகமாக ஓடிக்கொண்டுதானிருந்தன. பஸ்களும், டிராம்களும், சைக்கிள்களும், ரிக்ஷாக்களும் இன்னும் பல ரகமான வாகனங்களும் அங்குமிங்கும் போய் வந்தன.

இவற்றினூடே, இவற்றின் ஏறலை இறங்கு அலை இயக் கங்களுக்கெல்லாம் ஈடு கொடுத்துக்கொண்டு, தங்களைப் பாதுகாப்பதோடு, தங்கள் பொறுப்பிலே விடப்பட் டுள்ள சாமான்களையும் பாதுகாக்க வேண்டும் என்கிற கடமை உணர்ச்சியோடு, ஒரு பெரிய பார வண்டியை இழுத்தபடி அடிஅடியாக முன்னேறி ஊர்ந்தனர் இரு மனிதப் பிராணிகள்.

ஆங்கிலக் கலாசாரத்தின் தத்துப் பிள்ளைகள் 'நவ நாகரிகத்திலே இது ஒரு அனக்ரானிஸம்!' என்று சொல்லிவிட்டுத் தம் பாட்டிலே போவர். வாழ்க்கை வெயிலினால் வறளடிக்கப்படாமல் மனித இதயமும் மனித உணர்ச்சியும் கொஞ்சமாவது பெற்றிருக்கிறோம் என்று சொல்லக் கூடியவர்கள், மாடுகளைவிட மோசமாக மாற நேர்ந்து விட்ட மனிதப் பிராணிகளின் கதியை நினைத்துப் பெருமூச்செறிந்து விட்டுப் போகலாம்.

ஆனால், பட்டணத்திலே 'அவரவர் பாடுதான் பெரிசு' என்ற கவலையோடு, தம் தொல்லையும் தலைதெறிக்கும் அவசரமும் தாமுமாய், வாகனாதிகளிலும் கால் நடையாகவும் போய் வருகிறவர்கள் தொகைதான் அதிகம். அவர்கள் கண்ணில் பட்டாலும் பிரக்ஞையில் படியாத, ஆயிரமாயிரம் அன்றாட நிகழ்ச்சிகளில் இதுவுமொன்று. அவ்வளவுதான்.

வெயிலில், கால் சுட, இளகி நிற்கும் தார் தன்நயம் உணர்த்தும். மண்டை வெடிபட, ஒளிக் கதிர் தன் வண்மை காட்டும். அவற்றோடு பாரம் அழுத்த, பசி வயிற்றைப் பிய்க்க, தார் நிறமேனியிலே முத்துத் துளிகள் போல் வேர்வை பொடித்து நிற்க, அவ்விரண்டு பேரும் முன் குனிந்து—பெருமூச்சுயிர்த்து—அடி அடியாகக் கால்களை நகர்த்தி வண்டியை இழுத்துக் கொண்டிருந்தார்கள்.

கணகணத்து, லொடலொடத்து வரும் டிராம்வண்டியின் தடத்தை விட்டு விலகி வழிவிட வேண்டும். அதற்குள் முன் பக்கமும் பின்பக்கமும் வந்து தங்கள் அவசரத்தை 'ஹார்ன்' ஓசை மூலம் ஒலி பரப்பும் கார்க்காரர்களுக்கு வழி மறைத்திராத 'மாடு'களாக விளங்க வேண்டும். இன்னும் பல தடங்கல்களையும் சமாளித்து, பலரது தாக்குதல்களையும், ஏசல்களையும், எரிச்சல் மொழிகளையும் தாங்கிக் கொள்ளவேண்டும். ......பசியைத் தணித்து வயிறு வளர்த்து, உயிரைக் காப்பாற்றிக்கொள்ள எப்படியாவது உழைத்து, நாளோட்டுகிற மனித வர்க்கத்திலே இரண்டு பேர்—அநாமதேயங்கள் அவர்கள். பிறருக்காக உழைத்து 'உயிரைக் கொடுத்தும்' கூட தாம் வாழ முடியாது. 'செத்த பிழைப்பு' பிழைக்கும் ஜீவன்கள்.

நாகரிக நகரத்திலே, நடுரோட்டில், அநாகரிகத்தின் சின்னங்களாய், மனித வர்க்கத்தின் மானங்கெட்ட தன்மையைச் சுட்டிக் காட்டும் பிம்பங்களாய், 'கலாசாரம்,

கலாசாரம்' என்று வாய்ப்பறை அறையும் கபோதிகளைப் பழிக்கும் பிரத்தியட்ச கோரங்களாய், ஊர்ந்து கொண்டிருந்தார்கள்-மிஷின் யுகத்திலே கூட மனிதர்கள் பொதி மாடுகளாக மாறவேண்டிய அவசியம் ஏற்படும் என்பதை விளம்பரப் படுத்துவது போல.

நாகரிக அலை முட்டி மோதி சுழித்து நெளிந்து புரண்டு, ஏறி இறங்கி வடிந்துகொண்டுதானிருந்தது. அவர்களை அது பாதிக்கவுமில்லை. அவர்களால் பாதிக்கப் படவுமில்லை.

தெருக்களின் ஏகபோக வாரிசுகள் போல, நான்கு மாடுகள் அங்குமிங்கும் நகர்ந்தன. குறுக்கே நின்றன. அசையாது பார்த்தன. இஷ்டப்பட்டால் வழி விட்டன. 'பிளஷர் சீமான்கள்' வேகத்தை மட்டுப் படுத்தியும், விலகியும், சிலசமயம் காரை நிறுத்தியும் மாடுகளின் பண்பை கௌரவித்து விட்டுப் போனார்கள். ஆனல், பாரவண்டியை இழுக்க முடியாமல் இழுத்துச் செல்லும் மனித உருவங்கள் பேரில் 'நெற்றி ஒற்றைக் கண்ணனின்' பொட்டைத்தனப் பார்வையை எறிந்தார்கள்.

'டேய், காட்டு மாட்டுத் தனமாக என்னடா இது, வழி விடாமல் நடு ரோட்டிலே?....'உம், விலகி ஓரமாப் போங்கடா'....'மடையன்கள்! வண்டி இழுத்துப் போற லெச்சணத்தைப்பாரு' என்றெல்லாம் அருளுரை புகன்று அப்பால் போனார்கள்.

என்றாலும், மனித உருவம் பெற்றிருந்தும் மிருகங்களின் வேலையைச் செய்து வாழ முயலும் அவ்விரண்டு நபர்களும் தங்கள் உழைப்பே லட்சியமாய், கிடைக்கக் கூடிய கூலியே குறிக்கோளாய், உணர்ச்சிகளை அவிய வைத்து, அடி அடியாக அசைந்து கொண்டிருந்தார்கள்.

அதே வேளையிலே எதிரே ஒரு வண்டி வந்தது. அதிகச் சுமை எதுவுமில்லை. இரட்டைக் காளை வண்டி

தான். மெதுவாகத் தான் வந்து கொண்டிருந்தது. மாடுகளில் ஒரு மாட்டுக்கு ஏதோ நோய். கழுத்து புண்ணுகியிருந்தது. ரணம் பட்டு, ரத்தம் கசிந்து காய்ந்து பொறுக்காகி யிருந்தது. அதில் ஒன்றிரண்டு ஈக்கள் அரித்துக் கொண்டிருந்தன.

அப்போது அவ்வழியாக வந்து சேர்ந்தார்கள் காக்கிச் சட்டையும், கருணைச் சட்டம் பதிந்த கடமை நெஞ்சும் கொண்ட அதிகார புருஷர்கள் இரண்டு பேர். மிருகங்களுக்குக் கொடுமை இழைக்கப்படுவதைத் தடுப்பதற்காக அமைந்த ஒரு இலாகாவின் செல்வர்கள்.

முரண்பாடுகள் மலிந்த இன்றைய சமுதாயத்திலே எவ்வளவோ விந்தைகள் நடக்கின்றன. இந்த புத்த வாரிசு இலாக்காவின் தயவினுலும் விந்தைகள் நடைபெருமல் இல்லை. மனிதன் கோழியைக் கொன்று கறி செய்து சாப்பிடலாமாம் ஆனல் காலைப் பிடித்து தலை கீழாகத் தொங்கவிட்டு, கோழியை எடுத்துப் போனல் அது கொடுமையாம்! இதைப்போல அதிகம்.

சைக்கிளில் வந்த காக்கி உடைக் கருணையாளர்கள் வண்டி இழுத்துக் கஷ்டப்படும் மனிதப் பிராணிகளைப் பார்க்காமல் இல்லை. அவர்களை அப்படிக் கொடுமைப் படுத்தும்—வாழ்க்கையை வஞ்சிக்கும்—சமுதாய அமைப்பு முறையைப் பற்றிச் சிந்திக்கத் தெரியாது அவர்களுக்கு. அதற்கு அவகாசமும் இல்லைதான்.

அவர்கள் பார்வையில் காயம்பட்ட மாடு தென்பட்டது. இப்படி மாட்டைக் கொடுமைப் படுத்தலாமா? அது தண்டனை பெறவேண்டிய குற்றமாயிற்றே! பிடி வண்டிக்காரனை. சார்ஜ் பண்ணு. விலாசம் எழுது. நடவடிக்கை எடு!—கடமை உணர்வு காட்டிய பாதையிலே அவர்கள் தீவிரமாக முன்னேறினர்கள். வண்டிக்காரனின் கெஞ்சல்களும், கும்பிடுகளும் வாயில்லாச் சீவன்களுக்காக

வக்காலத்து வாங்க வந்த இந்தயுகத்து புத்த முனிகளின் மனதில் இரக்கம் உண்டாக்கவில்லை. கடமையைச் செய்த மகிழ்வோடு சைக்கிளில் ஏறினார்கள்.

போகும்போது எதிர்சாரியில் வண்டி இழுத்து அசையும் 'மனித மாடு'களைப் பார்த்தார்கள்.

'ஏ மடையன்களா! ஓரம் போ! ரோடு என்கிற நெனப்பே இல்லாமெ நடுமத்தியிலே வண்டியைக் கொண்டு போறல்? ஓரமாப் போங்கடா!' என்று கூவி விட்டு, தங்கள் 'இரும்புக் குதிரை'க்கு இயக்கம் கொடுத்தார்கள்.

இரும்பு யுகத்திலே இரும்பாகத் தோன்றாமல் மனிதனாய்ப் பிறந்துவிட்ட குற்றத்தால் மாடுகளைவிட மோசமாய் வாழ்கிற இரண்டு பேரும், நெடு மூச்செறிந்தவாறே அடி அடியாய் நகர்ந்தார்கள். பார வண்டியும் கொஞ்சம் கொஞ்சமாய் அசைந்தது.

அந்த மனிதர்களின் மோனநெடு மூச்சுக்கு ஏதாவது அர்த்தம் இருக்க முடியுமா?

ஒரு சிலர் தாம் வாழ வகை செய்துகொள்ளும் இன்றையச் சமுதாயத்திலே நாய்கள் 'முதலாளி நாய்கள்' ஆகி, சுகமனுபவிக்க முடியும்; மாடுகள் நன்றாக இஷ்டம் போல் வாழலாம்; பன்றிகளும் பறவைகளும் நல்ல போஷாக்கில் வாழ முடியும். ஆனால் மனிதரில் பெரும் பாலர் மனிதராக வாழமுடியாதா?—உழைத்து உழைத்து உடல் நலிவோரது தீ மூச்சின் பொருள் இதுவாக இருக்கலாம் அல்லவா?



# பெரியவளும் சின்னவளும்

அந்த வீட்டில் இரண்டு பெண்கள். பெரியவள் பெயர் லக்ஷ்மி. அவளுக்குப் பதினைந்து வயது இருக்கலாம். பள்ளிக்கூடத்துக்கு ஒழுங்காகப் போய் வந்து கொண்டிருந்தாள். நல்ல குணங்கள் நிரம்பப் பெற்றவள். அடக்க ஒடுக்கமான பெண்.

அவள் தங்கையான சரோஜா அக்காளுக்கு நேர் மாறான குணங்களையுடைய சிறுமி. அவளுக்கு ஏழு அல்லது எட்டு வயது தான் இருக்கும். அமைதியாக இராள். ஆடி பாடிக் குதியாட்டம் போட்டுக் கொண் டிருப்பாள். துறு துறுத்த சுபாவம். குறும்புக் குணம் அதிகம்.

தங்கச்சியின் போக்கு அக்காளுக்குப் பிடிக்காது. அதிலும், சின்னவள் 'அது என்ன? இது என்ன? அது ஏன் அப்படி இருக்கிறது? இது ஏன் இப்படி இல்லை?' என்ற தன்மையில் தூண்டித் துளைக்கும் கேள்விகளை எறியும் போது, பெரியவளுக்கு அவளைச் சுத்தமாகப் பிடிக்காது.

சரோஜா கேட்கிற கேள்விகளுக்குத் தன்னால் பதில் சொல்ல முடியாது என்ற உணர்வு தூண்டி விடும் ஆத்திர மாகவும் இருக்கலாம். 'என்ன சொன்னாலும் சரி, இந்தச் சின்னக் குரங்கு ஏற்றுக் கொள்ளாது. அதுக்குத் திருப்தியே ஏற்படாது' என்ற எண்ணத்தின் விளைவாக

வும் இருக்கலாம். காரணம் எதுவாக இருப்பினும், சின்னவள் வாயைத் திறந்து விட்டால், பெரியவளுக்கு எரிச்சலும் கோபமும் தான் பொங்கி வரும்.

சதா வாயடி அடிக்கிற சின்னவளை ஒரு சமயமாவது வாய் மூடச் செய்து, திகைப்பில் ஆழ்த்தி விட வேண்டும் என்ற எண்ணம் அக்காளுக்கு. அதற்கு ஒரு சந்தர்ப்பத்தை எதிர் நோக்கி இருந்தாள் லக்ஷ்மி.

புதிதாக ஒரு கதையைப் படித்ததும், சின்னவளுக்குப் புத்தி கற்பிக்க இது உதவும் என்ற மகிழ்ச்சி பிறந்தது பெரியவளுக்கு. உடனேயே உற்சாகமாகக் கத்தினாள் 'சரோஜா... ஏட்டி, ஏ சரோஜா!' என்று.

சரோஜா ஏதோ விளையாட்டில் ஈடுபட்டிருந்தாள். சும்மா உட்கார்ந்து கனவுதான் கண்டு கொண்டிருக்கட்டுமே! பிறர் கூப்பிட்ட உடனேயே துள்ளிக் குதித்து ஓடி வரும் வழக்கம் அவளிடம் கிடையாது. இப்பொழுதும், இயல்புப் பிரகாரம் 'என்னேய்!' என்று குரல் மட்டும் கொடுத்தாள் அவள்.

'அடியே, இங்கே சித்தெ வாயேன்!' என்று கூவினாள் அக்காள். தங்கச்சி சிணுங்கினாள் 'ஏனும்?' என்று.

அக்காளுக்கு எரிச்சல் பிறந்தது. கூப்பிட்டதுமே அந்தச் 'சின்னமூதி' எழுந்து வரவில்லையே என்று தான். எந்தப் பெரியவருக்கும் எழக்கூடிய எண்ணமும் உணர்ச்சியும் தான் இது.

'ஏ மொட்டைக் கடா! அங்கே என்ன தான் செஞ்சுக்கிட்டு இருக்கிறே? கூப்பிட்டால் எழுந்து வர முடியலியோ?' என்று கத்தினாள் லக்ஷ்மி.

சரோஜா முழு மொட்டை அல்ல. 'கிராப்பு' மாதிரி வெட்டி விடப்பட்டிருந்தது தலைமுடி. அழகுக்காகத்

தான். இருந்தாலும் பெரியவர்கள் அவளை 'மொட்டை—மொட்டை' என்று குறிப்பிடுவதே வழக்கமாகி விட்டது.

அக்காளுக்கோ ஒரே ஏகத்தாளம் தான்!' மொட்டை மொட்டை மிளக்கு ஸார்! கம்பளி மொட்டை டேக்கு ஸார்!' என்றும், 'பம்பை-பரட்டை-பாணுக்குடிச் சிரட்டை! தும்பை-துளசி-தூக்கிப் போட்டால் மம்பட்டி!' (மண் வெட்டி) என்றும் பாடிக் கெக்கலி கொட்டுவாள்.

இது மாதிரிக் கூவல்களுக்கு அர்த்தம் இருக்கும், இருக்க வேண்டும் என்று சிறுவர் சிறுமிகள் எதிர்பார்ப்பதில்லை. கத்துவதற்கு உற்சாகமாக இருக்கிறதல்லவா? அதுதான் முக்கியம். கும்மாளியோடு கத்தினால், பாதிக்கப் படுகிறவர்கள் சீறவோ சிணுங்கவோ தொடங்குகிறார்களா? அப்பொழுது பிரமாதமான வெற்றி என்று தான் அர்த்தம்.

லக்ஷ்மியும் சின்னவளாக இருந்து பெரியவள் ஆனவள் தானே! சின்ன வயசிலே கற்றுக் கொண்டவை மறந்தா போகும்? தங்கச்சிக்குக் கோபம் எழுப்ப ஆசைப் படுகிற போதெல்லாம் அக்காள் இப்படித் தான் கத்துவாள். 'மொட்டைக் கடா!' என்று தான் கூவுவாள்.

அக்காள் அவ்விதம் கூப்பிட்டதும் சரோஜா தொண்டை கிழிந்து விடுவது போல் கத்தினாள். 'இப்ப எதுக்காகக் கூப்பிடுதியாம்?'

'இவளுக்கு வேறே வேலே இல்லை. எப்பப் பார்த்தாலும் எட்டி, எட்டி என்று கத்திக் கொண்டு!' என்று தானாகவே சிணுங்கிக் கொண்டாள் அவள்.

சரோஜா என்ன தான் செய்கிறாள் என்று பார்ப்பதற்காக அந்தஇடத்திற்கு வந்த பெரியவளின் காதுகளில் தங்கச்சியின் முணுமுணுப்பு விழுந்தது. 'என்னடி முண

முணங்கிறே? சொல்றதைச் சத்தம் போட்டுச் சொல்லேன்!' என்று சிரித்தபடி கூறினாள்.

'ஆமா சொன்னேன் சுரக்காய்க் கூட்டுக்கு உப்புப் போதாது யின்னு....நீ பாட்டுக்கு உன் வேலையைப் பார்த்துக் கிட்டுப் போறது தானே!....படிச்சுப் பாஸ் பண்ணி கலெக்டரு பொண்டாட்டியாகப் போற பெரிய மனுஷி!' என்றாள். கலகலவென நகைத்தாள்.

அம்மாவோ அத்தையோ இப்படி வக்கணை கொழித்திருப்பது இயல்பு பெரியவர்களிடமிருந்து சிறு பிள்ளைகள் கற்றுக் கொண்டு, பிறகு அவற்றை மறுபடி ஒப்புவிப்பதும் இயல்பு தானே?

'ஏ தடிக் கழுதை! உன் தலையை நறுக்கிருவேன்!' என்று கத்தினாள் அக்காள்.

'கசாப்புக் கடைக்கு வேலைக்குப் போயேன்! அங்கே தலையை நறுக்க ஆள் இல்லையாம்!' என்றாள் சரோஜா.

அவளுக்கு எப்பவுமே வாய் அதிகம் தான்!

லக்ஷ்மிக்கு ஆத்திரம்தான். 'அப்படியே மொட்டைத் தலையில் நறுக்குனு குட்டினேனோ, உன் கழுத்தே உள்ளே போயிடும். அப்புறம், புதுசாகப் பண்ணக் கொடுத்திருக்கிற நகையை நீ போட்டு அழகு பார்க்கவே முடியாது' என்றாள்.

அன்றாட வாழ்வில் 'உயர்வு நவிற்சி' அதிகமாகிவிட்டது. சின்னவர்களை மிரட்ட விரும்புகிற பெரியவர்கள் எல்லையில்லாமலே அளக்கிறார்கள். அந்தப் பண்பு லக்ஷ்மியிடமும் காணப்பட்டதில் வியப்பு ஏது?

சரோஜா சந்தேகிக்கிறவள் போல் அக்காளை நோக்கினாள். கழுத்தைத் தடவிப் பார்த்தாள். 'பொய்யி!' என்று கூச்சலிட்டாள்.

'எது பொய்? புது நகை செய்யக் கொடுக்கலே என்கிறியா?'

தங்கச்சி உறுதிக் குரலில் கத்தினாள். 'பொய்! கழுத்து உள்ளே போகாது. உன்னாலே அப்படிச் செய்ய முடியாது....'

'அது கிடக்கு, சரோ! நான் புதுசா ஒரு கதை படிச்சேன். ஜோரான கதை. அதை உன் கிட்டேச் சொல்லலாமின்னு தான் கூப்பிட்டேன்' என்றாள் லக்ஷ்மி.

சரோஜாவுக்குச் சந்தேகந்தான். 'சும்மா சொல்லுதே! ஏமாற்றிப் போடுவே நீ. உனக்கு ஏதாவது வேலை ஆகவேண்டியிருக்கும்' என்றாள்.

'இல்லேடி. நிஜம்மா அப்படியில்லே. கதை சொல்லத் தான் கூப்பிட்டேன்.'

'பின்னே சொல்லேன்!' என்று உத்திரவிட்டாள் சிறுமி.

'அந்த அறைக்கு வா!'

'பார்த்தியா, உனக்கு எதோ வேலை ஆகவேண்டியிருக்குது. அதுதான்....'

'இல்லேன்னா இல்லேடீ. அங்கே நீ நாற்காலியிலே சாய்ந்துக்கிடுவியாம். நான் கட்டிலிலே சாய்ந்தபடி கதை சொல்ல முடியும். அதுக்காகத்தான்' என்றாள் லக்ஷ்மி.

'ம்ம்' என்ற தங்கச்சி, விளையாட்டையும் விளையாட்டுச் சாமான்களையும் அப்படி அப்படியே போட்டு

விட்டு, அக்காளைப் பின் தொடர்ந்து அவள் அறைக்குப் போனாள்.

அக்காள் கதை சொல்ல ஆரம்பித்தாள்.

'ஒரு ஊரிலே ஒரு பாட்டி இருந்தாள்....'

சரோஜா குறுக்கிட்டாள்: 'நீ ஆரம்பிக்கிற கதை எல்லாமே இப்படித்தான்—ஒரு ஊரிலே, ஒரு ஊரிலே யின்னு. அந்த ஊருக்கு ஏன் ஒரு பேரு இருக்கப் படாது?'

'ஏட்டி, நான் இப்பவே சொல்லிவிடுகிறேன். நீ இது மாதிரி எல்லாம் வீண் கேள்வி கேட்கப்படாது. கேட்டால்....'

'இது வீண் கேள்வியா அம்மா? ஊர்னு இருந்தால் பேரு இருக்காதோ? இல்லே கேட்கிறேன்.'

'இந்த ஊருக்குப் பேரு கிடையாது. அவ்வளவு தான்.'

'சரி. ஒரு பாட்டி இருந்தா. அப்புறம்?

'அவளுக்கு ஒரு பேத்தி உண்டு.'

'பாட்டி இன்னியே, அவ எப்படி இருந்தா? உயரமா, தடியா, தலை நரைச்சுப் போய் இருந்தாளா? எலும்பும் தோலுமா, மொட்டைத் தலைப்பாட்டியாக இருந்தாளா?' அவ யார் வீட்டிலே இருந்தா?'

'பாட்டி தனியாகத்தான் இருந்தாள்....சரோஜா, நான் கதையைத் தொடர்ந்து சொல்றதுக் குள்ளேயே அவசரப்பட்டு விடுகிறே. அது தப்பு ...'

'சந்தேகம் வந்தால் கேள்வி கேட்கப் படாதோம்மா? இது என்ன நியாயம்?' எனச் சிணுங்கினாள் தங்கை.

'பாட்டிக்குச் சொத்து இருந்தது. தனி பங்களா இருந்தது. அதிலே அவள் தனியாகத்தான் இருந்தாள். அவள் பேத்தியின் வீடு ஒரு மைல் தூரம் தள்ளி இருந்தது. பாட்டிக்கு ஏதோ வியாதி; அதனாலே தான் அவள் தன் பங்களாவை ஊருக்கு வெளியே உள்ள இடத்தில் கட்டியிருந்தாள். அங்கு காற்றோட்டம் அதிகம். சுத்தமான காற்று உடம்புக்கு நல்லது....'

தான் படித்ததைப் படித்த மாதிரியிலேயே சொல்லிக் கொண்டு போனாள் அக்காள். வேகமாகச் சொன்னாள். தயங்கித் தயங்கிப் பேசினால், தங்கச்சி வாய் திறக்க இடமளித்தது போல் ஆகிவிடும் என்ற பயம் அவளுக்கு.

'பேத்தி....'

'அவ பேரு என்ன?' என்று கேட்டாள் சரோஜா.

'வள்ளி' என்றாள் அக்கா.

'வேறே அழகான பெயராக இருந்திருக்கலாம்' என்று அபிப்பிராயப்பட்டாள் சின்னவள்.

'சரோஜா என்று இருக்கலாமா? அவளும் உன்னைப் போல் தான் இருந்தாள் துஷ்டப் பிள்ளையாக!'

'பொய்!' என்று கத்தினாள் சரோஜா. 'நான் அப்படியில்லை. எங்க டீச்சர் அம்மா கூடச் சொல்லிக் கொடுத்தாங்களே—

அம்மா அம்மா வாரும்;
என்னை நன்றாய் பாரும்!
துஷ்டப் பிள்ளை நானோ?
சும்மா சொல்லுவேனோ?'

அக்காளுக்கு 'ஏன் தான் கதை சொல்ல ஆரம்பித்தோம்' என்றாகி விட்டது. 'சரி சரி, உனக்குக் கதை வேணுமா வேண்டாமா?' என்று கேட்டாள்.

'நீ தான் சரியாகவே சொல்ல மாட்டேன்கியே!'

'நானா சொல்லலே?.... சரி கேளு!'

'ம்ம். சொல்லு!'

'வள்ளி அவளோட அம்மா கூட இருந்தா....'

'அந்த அம்மா ஏன் பாட்டி கூட இருந்திருக்கப் படாது?' என்று கேட்டாள் சரோஜா.

'ஏனோ எனக்குத் தெரியாது. கதையிலே அப்படித் தான் வருது.?

'ம், சரி!'

'வள்ளி ஒரு வாயாடி. எல்லாம் தனக்குத் தெரியும்; எதையும் தன்னாலே செய்துவிட முடியும் என்கிற அகம் பாவம் உன்னை மாதிரி இருந்தாள்னு வச்சுக்கியேன்........'

'உன்னை நான் ஏசுவேன். கண்டபடி திட்டுவேன்!' என்றாள் தங்கச்சி.

அக்காள் சிரித்தாள். கதை சொன்னாள்.

'வள்ளி வீட்டிலே சொல்லாமல் பாட்டி வீட்டுக்குப் போய்விடுவாள். தனியாக நடந்தே போய்விடுவாள்....'

'உன்னை மாதிரி, அடுத்த தெருவுக்குப் போக ரிக்ஷா கேட்கலே பாரு. அதனாலேதான் வள்ளியை உனக்குப்

பிடிக்கலே' என்று சொல்லிப் பழி தீர்த்துக் கொண்டாள் சரோ.

லக்ஷ்மி லேசாகச் சிரித்தாளே தவிர சீறவில்லை. தொடர்ந்தாள் :

'அப்படி அவள் போவதையும் வருவதையும் ஒரு ஓநாய் பார்த்துக் கொண்டே இருந்தது.'

'ஓநாயின்னு?'

'அது ஒரு மிருகம்.'

'நாய் மாதிரித்தான் இருக்குமா?'

'நாயை விடப் பெரிசா இருக்கும். தடிப்பண்ணி யாட்டம் வளர்ந்திருக்கும்.'

'அப்ப அது பண்ணியா?'

'இல்லேடி, ஓநாய்; கொடிய மிருகம். ஆடு மாடுகளை அடித்துக் கொன்று தின்னுபோடும். குழந்தை குட்டி களைத் தூக்கிட்டுப் போய் திங்கும். சில சமயம் பெரிய ஆட்களையே தின்னுவிடும். கன்னுகுட்டி மாதிரி....

'கன்னுக்குட்டி ஆளுகளைத் திங்குமோ அம்மா? பேசுதியே........'

'அவ்வளவு பெரிசா, உயரமா வளர்ந்திருக்கு மின்னு தானேடி சொன்னேன்?'

'முதல்லே பண்ணி மாதியின்னியே பின்னே! பண்ணிக்கும் கன்னுக் குட்டிக்கும் எவ்வளவு வித்தியாச மிருக்கு!'

'போடி, உன் கூட யாருடி பேசுவா? உனக்கு ஒரு எழவுமே தெரியாது. உதாரணத்துக்குச் சொன்னால்.....

இப்படிச் சொல்லாமே, பின்னே எப்படிடீ புரிய வைக்கிறதாம்?'

'ஓநாய் ஓநாய் மாதிரித்தான் இருக்குமின்னு சொல்லணும்!'

'அப்படிச் சொன்னால் புரிஞ்சிரும் பாரு, நீயும் உன் மோறையும்!'

'உன் முகறக் கட்டை வெறும் கொழுக்கட்டை! சரி, கதையைச் சொல்லு.'

'கதையும் சொல்ல முடியாது; ஒண்ணும் சொல்ல முடியாது, போடி! எழுந்து போ' என்று எரிந்து விழுந்தாள் பெரியவள்.

'நீ தானே கூப்பிட்டே! உனக்கு பாக்கி கதை மறந்து போச்சு போலிருக்கு. அதுதான் இப்படிப் பேசறே!' என்றாள் சரோஜா.

'கண்டிப்பாச் சொல்றேன். நீ இன்னொரு தடவை இதுமாதிரி வம்பு செய்தியோ கதை சொல்ல மாட்டேன்.'

'இல்லே....சொல்லு' என்று வாக்களித்தாள் தங்கச்சி.

'ஓநாய் வள்ளியைப் பிடித்துத் தின்ன வேண்டும் என்று எண்ணியது.'

'லபக்குனு பாய்ந்து பிடிக்கிறது தானே!'

'வள்ளியை ஏமாற்றி அவளைச் சாப்பிடத் திட்டம் போட்டது. ஒருநாள் பாட்டி வீட்டிற்குள்ளே போய் பாட்டியைக் கொன்று, அவள் ரத்தத்தைக் குடிச்சுப் போட்டு, பாட்டி மாதிரி போர்த்திக்கிட்டுக் கட்டிலிலே படுத்துக் கிடந்தது. எது? அந்த ஓநாயி!'

'ஏ, முட்டா மூதேவி!' என்று கனைத்தாள் சரோ.

'ஏண்டி அப்படிச் சொல்றே?'

'வள்ளியை லேசாப் பிடித்துவிட முடியுமே. அதை விட்டுப் போட்டு, இவ்வளவு பெரிய காரியம் எல்லாம் பண்ணுவானேன்? இதிலிருந்தே அந்த மூதேவிக்கு மூளையில்லை என்று தெரியுதே!'

அக்காளுக்கு என்ன சொல்வது என்றே தெரியவில்லை. 'கதையைக் கேளுடி!' என்று எச்சரித்தாள்.

'நான் கேட்காமல் என்ன செய்றேனும்? சொல்லு; சொல்லு.'

'வள்ளி வீட்டிலே சொல்லிக் கொள்ளாமல் பாட்டி வீட்டுக்கு வந்தாள். அப்போ சாயங்கால நேரம். பாட்டி வீட்டுக்குள்ளே இருட்டாக இருந்தது. பாட்டி, பாட்டி, விளக்கு ஏற்றவில்லையா என்று கத்தினாள். ஓநாய் தொண்டையை ஒரு மாதிரி ஆக்கிக்கொண்டு, இங்கே வாடி கண்ணே; எனக்கு ரொம்ப அசதியாக இருக்குது என்றது. வள்ளி கட்டில் அருகே போய் பார்த்தாள். உன் முகம் என்னமோ மாதிரி ஆகிவிட்டதே பாட்டி என்றாள். எனக்கு வியாதி முற்றிவிட்டதடி என்றது ஓநாய் பாட்டி. கையை நீட்டி, இங்கே பக்கத்தில் வாயேன் என்றது. கைகூட எப்படியோ இருப்பதைப் பார்த்த வள்ளி பயந்து போனாள். ஓடிவந்து கதவைத் தாழ்ப்பாளிட்டுவிட்டு அலறி அடித்துக்கொண்டு ஊர்ப் பக்கம் வந்தாள். எல்லோரும் என்ன, ஏது என்று விசாரித்தார்கள். பாட்டியைக் காணோம்; படுக்கையிலே ஓநாய் மாதிரி என்னமோ... என்று அழுதாள். எல்லோரும் தடி, கம்பு, அரிவாளுனு எடுத்துகிட்டு போயி, ஜாக்கிரதையாகக் கதவைத் திறந்து, ஓநாயை அடி அடி என்று அடித்துக் கொன்றுவிட்டார்கள். வள்ளியை எல்லோரும் கண்டித்தார்கள். தனியாகப் போனதினால்தானே இப்படி ஆச்சு; உன்னையும் ஓநாய் கடித்திருந்தால் என்ன ஆகிறது? சின்னப் பிள்ளைகள் சின்னப் பிள்ளை

களாக இருக்கவேண்டுமே தவிர, பெரியதனமாகக் காரியங்கள் பண்ணப்படாது என்றார்கள். புரியுதா, உனக்கும் சேர்த்துத் தான் இந்தப் பாடம். இந்தக் கதையிலேயிருந்து என்ன தெரியுது...?'

'ஓநாய்க்கு மூளை கிடையாது. பெரியவர்கள் சின்னப் பிள்ளையை சரியாகப் பாராட்டுவதில்லை என்று தெரியுது!' என்றாள் சரோஜா.

'என்னடி உளறுகிறே?'

'பின்னே என்னவாம்? ஓநாய்க்கு என்ன தந்திரம் வேண்டிக் கிடக்கு? நேரடியாகப் பிடிக்கிறதை விட்டுப் போட்டு! அது போகட்டும் ...வள்ளி ஓடிப்போகலேன்னு சொன்னா, ஓநாய் பிடிபட்டிருக்குமா? வள்ளி தைரியமாய் தப்பலேன்னு சொன்னா, ஓநாய் உயிரோடுதானே திரிஞ்சிருக்கும்? அது ஆபத்துதானே' என்றாள் சின்னவள்.

'பெருமூச்செறிந்தாள் பெரியவள்.



# இன்பம்

நீல வானிலே மேகங்கள் நீந்திக் கொண்டிருந்தன, காற்றில் அடிபட்ட வெண்நுரைக் கூட்டம் போல.

மண் விண்ணைப் பார்த்து நின்றது, வறண்ட சுடு மூச்சோடு. வாழ்க்கை வெயிலில் அடிபட்டுத் தளர்ந்தவர்களின் முகத்திலே காலம் கீறி விடுகிற ரேகைகளைப் போல், பூமிப் பரப்பின் நெடுகிலும் கீறல்கள் வெடித்துக் கிடந்தன. வளம் குன்றியிருந்தது. பசுமைக்குப் பஞ்சம் ஏற்பட்டிருந்தது.

வானத்திலே, மாவுக் குவியல்கள் போலவும், ஐஸ் கட்டிகள் போலவும், பஞ்சுத் திவலைகள் போலவும், கொட்டிக் குவித்த மல்லிகைப் பூத் தொகுப்புகள் போலவும், மேகங்கள் சிதறிக் கிடந்தன.

'இம் மேகங்கள் சூலுண்டு மழையாகப் பொழியுமானால்!' என்ற ஏக்கம் மண்ணின் பார்வையில் பொதிந்து கிடந்தது.

'நாம் அங்கே போவோமா?' என்று கேட்டது மேகங்களில் ஒரு மேகம்.

'அங்கே போவதற்குள் நாமே இல்லாமல் போவோம். நம்மை நாமே இழந்து விடுவோம்' என்றது, ஞானியின் தாடியைப் போல் வெள்ளை வெளேர் என்றிருந்த மேகம் ஒன்று.

'அதில் இன்பம் உண்டு. கொடுப்பதிலே தனி இன்பம் இருக்கிறது. பிறருக்கு உதவுவதே பேரின்பம்' என்றது மற்றொன்று.

நீலவானம் மோனமாய் சிரித்துச் சொன்னது: 'உண்மை. உங்களுக்குக் கிடைத்துள்ள வாழ்க்கை அற்புதமானது, மக்களின் வாழ்க்கையைப் போல. வாழ்வு சிறப்புறுவது ஈகையினால். அளிக்கும் போது மகிழ்வு பிறக்கிறது. அது பன்மடங்காய் பெருகிப் பரிணமிக்கிறது. எங்கும் இன்பம் மலர்கிறது. நாம் கொடுப்பது நமக்கே வந்து சேர்கிறது, ஏதேனும் ஒரு வகையிலே.'

கொக்குக் கூட்டங்கள் போலவும், சலவைத் துணிகள் போலவும், நீள் கடலின் வெண்மய அலைகள் போலவும் மிதந்த மேகங்கள் மௌனமாயின. விண்ணின் குரல் அவற்றுக்குப் புரிந்ததோ என்னவோ! புரிந்து கொண்டது போல் சில தோற்றம் காட்டின. பெருத்தன. கனத்தன. காருருப் பெற்றுத் தாழ்ந்து தாழ்ந்து இறங்கின. வியன் வான் முழுவதையும் வியாபித்துப் பரந்தன.

கண்ணாடிக் குண்டுகளைப் போலவும், வெள்ளிக் கம்பிகள் போலவும் நீர்ச்சரம் உகுத்தன மேகங்கள். தூறல் சிந்தி, பெருந் தூறலாய் கனத்து, மழையாகப் பொழிந்தது.

எங்கும் நீர்....நீர்....நீரின் காடு!

மழை நின்றதும் வானம் நீலமாய் சிரித்தது. மேகத்தையே காணோம். எனினும் விண் வருந்தவில்லை.

பூமியின் உள்ளம் குளிர்ந்தது, வயிறாரச் சோறு உண்டவனின் அகத்தைப் போல. அதன் மேனி முழுவதும் மலர்ச்சியுற்றது. காலத்தின் வருடுதல் ஏற்று, எங்கும் பசுமையும் பன்னிறமும் வளமும் குலுங்கின.

நெடுகிலும் நீர் நிறைந்து கிடந்தது. விண் கணந்தோறும் மண்ணின் மாற்றத்தைக் கண்டு மகிழ்ந்து அழகுற்றுக் கொண்டுதானிருந்தது.

ஒளிக்கதிர் பவனி வரவர, விண்ணிலே மேகங்கள் பூத்தன. சிதறின. மிதந்தன. தென்றல் எடுத்துச் செல்லும் அன்னத்தின் மென்தூவிகள் போலவும், யாரோரோ பறக்க விட்ட காற்றாடிகள் போலவும், மேகங்கள் நீந்தின.

இப்போது மண் விண்ணை நோக்கி அனல் மூச்சு எறியவில்லை.



# விண்ணும் மண்ணும்

"அழகான இடத்தில்தான் கடவுள் இருக்கிறார் என்றால், அவர் அங்குதான் இருக்க வேண்டும். ஆமாம். அதைவிட அழகான இடம் வேறு எங்குதான் காணமுடியும்?....காலை இளம் பரிதியின் பொன்னொளி தூவும் அழகு ஜாலம் எப்படிக் கண்ணைக் கவர்கிறது! உருவற்று ஓடித் திரியும் மேகங்கள்கூட அதற்கு வேளைக்கு ஓர் வனப்பு அளிக்கிறது. சுட்டெரிக்கும் சூரியன் அவ்விடத்து ஜோதி அன்றோ? மாலை நேரங்களிலே அந்த ஒளிக்கோளம் என்னென்ன வர்ண வேடிக்கைகளை உண்டாக்குகிறது!....இரவு ஆ, என்ன மோகனம்! யாரோ தேவமகள் தீட்டிய—வைரப் புள்ளிகளால் ஆக்கிய—கோலம்போல் மலர்ந்து கிடக்கும் நட்சத்திரத் தொகுப்பு. அக்காட்சியை விட்டுக் கண்களைத் திருப்ப முடியவில்லையே. எல்லாவற்றுக்கும் மேலாக, அமுத ஒளி அள்ளித் தெளிக்கும் சந்திரன்....ஆம், கடவுள் அங்குதான் இருக்கவேண்டும். அவ்வழகுகளுக்கிடையே அவர் எங்கு மறைந்திருக்கிறாரோ, அதுதான் தெரியவில்லை.''

இவ்விதம் மண்ணுலகம் வானை நோக்கி ஏங்குகிறது. ஆனால், வானகம் மண்ணை நோக்கி நெடுமூச்செறிகிறது—

''என்ன அழகு! எத்தகைக் கவர்ச்சி! கீழே தெரியும் வனப்புக் காட்சிகள் நெஞ்சை அள்ளும் தன்மையன. மலைகளும், மரங்களும், மலர் செறிந்த வனங்களும், நீர்

நிலைகளும்—ஆகா, அதுவே அழகின் ஆலயம். சந்திரிகையில் அவை எல்லாம் எப்படி பளபளக்கின்றன! சூரிய காந்தியிலே அவை தகதகக்கும் பொழுது என் மனம் துள்ளுகிறது. ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் நீர் நிலைகள் காட்டும் எழில் காட்சிகள்—காலைக் கதிரொளியில் அவை தெறிக்கும் பிரகாசமும், மத்தியான வேளைகளில் துள்ளும் பாதரசப் பரப்பென வெள்ளிக் கதிர்களை மினுக்கித் தெறிப்பதும், மாலைப் பொன்னிறத்தைப் பிரதிபலிப்பதும், சந்திரனின் வனப்பையும், விண்மீன்களின் மோகனத்தையும் எடுத்துக் காட்டுவதும்—அற்புதம், அற்புதம்! கடவுள்—அழகின் தேவன்—அங்குதான் இருக்க வேண்டும்.''

உலகைத் தினம் தினம் கண்டு ஏங்கும் வானம், மண்ணிலே கடவுளைக் காணத் தவிக்கிறது. கண்ணீர் சொரிகிறது—பனியாகவும், மழையாகவும்.

மண்ணகமோ விண்ணிலே கடவுளைக் காண மலைக் கரம் அலைக்கரம் நீட்டி அங்கலாய்க்கிறது.

ஆனால், இவ்விரண்டுக்கும் இடையே கிடந்து அலைந்து திணறும் மனிதர்களோ?

